# PATTABI's Feb 2024 FB Postings

Feb 1

ராஜேந்திர பிரசாத் அவர்களின் Autobiography 1946ல் வெளியான ஒன்று. 1946 அரசியல் நிர்ணயசபையின் முதல் கூட்டம், அதற்கு முந்திய செப்டம்பர் 2, 1946 ல் உருவான இடைக்கால நேரு அரசாங்கம் வரை அதில் பேசப்பட்டுள்ளது. 600 பக்க அளவிலான இந்தப் புத்தகம் எந்த sensational ம் இல்லாமல் பெரிய உளத்தூண்டல் எதையும் கிளப்பாமல், அப்படியே அவர் நினைவில் உள்ளபடி மிக அடக்கமாக , பெரும் துருத்தல் ஏதுமில்லாமல் எழுதப்பட்டிருக்கும் சுயசரிதை என என் வாசிப்பு எனக்கு உணர்த்தியது.

நேருவின் emotional and intellectual பாணியிலோ அல்லது ஆசாத்தின் தன்னை பெரிதாக முன்வைத்து பேசும் பாணியிலோ அல்லது ஆச்சார்யா கிருபளானியின் 1000 பக்க ஆவணங்களின் அடுக்காகவோ பிரசாதின் சுயசரிதை அமையவில்லை. அதேபோல் காந்தியின் சத்திய சோதனை போன்ற உண்மை பரிசோதனைகள் ஏதும் இல்லை.

படித்த அதேநேரத்தில் கிராமம் சார்ந்த, சட்ட நிபுணத்துவம் பெற்ற, ஆனால் அந்த லென்சில் வாழ்க்கையை பார்க்காத, இந்திய விடுதலைக்கான பெரும் காங்கிரஸ் இயக்கத்தில் வேலை பார்த்தாலும் எப்போதும் பீகார் சாயலுடன் , சிறைக்கு அவ்வப்போது சென்றாலும் அங்கு கொடுமைகளையெல்லாம் அனுபவித்த மனிதர் போன்ற தோற்றம் எதையும் உருவாக்காத , அடிக்கடி பல தொலைவு ஊர் சுற்றினாலும் ஆங்காங்கே நோய் வாய்ப்பட்ட மனிதராக ஓய்வெடுக்கும் பிரசாத்தை உணரமுடிந்தது.

பிரசாத் இந்த நூலை முடிக்கும்போது இதுவரை நான் அறிந்திராத தகவல் ஒன்றை தருவதை கண்டேன். காங்கிரஸ் தலைவர், அரசியல் நிர்ணய அசெம்பிளி, அமைச்சர் என மூன்று கதவுகளில் எதில் நுழைவது என்ற கேள்வி அவரிடம்… அமைச்சர் என்கிற நிர்வாக அனுபவம் இல்லாததால் அதைவிட மற்ற இரண்டில் எது காங்கிரஸ் ஒர்க்கிங் கமிட்டி முடிவாக சொல்கிறதோ அதை ஏற்கலாம் என அவர் மனம் சொல்லியது.

நேருவின் இடைக்கால சர்க்காரில் அவருக்கு உகந்த உணவுத்துறை அமைச்சர் பொறுப்பு வழங்கப்பட்டது. நேருவும், ஜின்னாவும் லண்டனுக்கு அழைக்கப்படுகிறார்கள். நேருவிற்கோ டிசம்பர் 9 ல் அரசியல் நிர்ணயசபையை கூட்டியே ஆகவேண்டும் என்ற பதபதைப்பு. அதற்கு எவ்வித இடையூறும் இருக்காது என்ற உறுதிமொழியை வைஸ்ராயிடம் பெற்றபின்னர்தான் நேரு லண்டன் வர சம்மதித்தார் என்ற கதை நமக்கு தெரிந்திருக்கலாம்.

இந்த செய்தியை பிரசாத் தருவது எனக்கு புதிதாக இருந்தது. லண்டன் செல்வதற்கு முன்னர் அரசியல் நிர்ணயசபைக்கு தலைவராக காங்கிரஸ் அல்லாதவர் இருந்தால் நல்லது என்ற கருத்து விவாதிக்கப்பட்டு நேரு, பிரசாத் போன்றவர் அதில் உடன்பட்டனர். என் கோபால்சாமி அய்யங்கார் அவர்களை தலைவராக்கலாம் என்ற முடிவு எட்டப்பட்டுவிட்டது. இது புதிய செய்தி.

லண்டன் பயணம் லீகின் நிலைப்பாட்டை மாற்ற உதவவில்லை. திட்டமிட்டபடி அசெம்பிளி டிசம்பர் 9 1946 ல் கூடப்போகிறது என அறிந்து உறுப்பினர்கள் வரத்துவங்கினர். கோபால்சாமி அவர்கள்தான் தலைவராக போகிறார் என்பது அதுவரை உறுதியாக இருந்துள்ளது.ஆனால் காங்கிரஸ் செயற்குழு கூடி பிரசாத் அந்த பொறுப்பை ஏற்கவேண்டும் என முடிவெடுத்தது. அமைச்சர் பணி இல்லையெனில் எடுக்கத்தயார் என்றார் பிரசாத். இல்லை ஏற்கவேண்டும் என செயற்குழு எடுத்த முடிவின்படி constituent Assembly president ஆக பிரசாத் ஆக்கப்பட்டார்.

இத்துடன் அவரது சுயசரிதை முடிந்து விடுகிறது. அடுத்து 17 ஆண்டுகள் 1963 வரையிலான காலமும் மிக முக்கியமானவை. இரு முறை குடியரசு தலைவராக இருந்தவர். நேருவுடன் சில சச்சரவுகளுடன் வாழ்ந்தவர். அதைப்பற்றி விரிவான ஆய்வுகளும் அவசியமாகின்றன. பல்வேறு தரப்புகளின் வழியே வரலாற்றை பயணிக்க அனுமதித்தல் என்பதே பெரும் போராட்டமாக அமைகிறது.

feb 1

ஜீவா நாவா சிந்தனைப்பள்ளி ஜன 31 2024 அன்று மாலை 150 நிமிட நிகழ்வாக காந்தியை அறிதல் உரையாடலை நடத்தினர். அதில் தோழர் பட்டாபியும் பங்கேற்று 75 நிமிட உரையாடலை தந்தார். சரி பாதி நேரம் ஒதுக்கி செவிமடுத்த ஜீவா நாவா சிந்தனை தோழர்களுக்கு என் நன்றி

feb2

“In August 1949 pressmen asked him, ‘Is it a fact that the Sangh plans to capture power ? Golwalkar answer is revealing. ‘ We have kept before ourselves the idea of Bhagwan Shri Krishna who held a big empire under his thumb, but refused to become emperor himself ? “. Page 131 The RSS A menace to India by A G Noorani

feb 2

## Pyarelal wrote so

There are two well known approaches to life- that of negation or elimination and that of affirmation or synthesis. Gandhi's critics represented the former, Gandhi was the embodiment of the latter.

Man's understanding of himself has not kept pace with his understanding of the outer world. His physics has not taught him how to regulate his own self. In the result the very power which he has gained over his physical environment today threatens to turn against him and overwhelm him.

Society must find answer to this double challenge of amoral force and a religion and morality that have lost their sanctions that states it in the face, or perish

feb 2

## Swami Vivekanand spoke so in his Chicago address why we differ on 15 th September 1893

I am a Hindu. I am sitting in my own little well and thinking that the whole world is my little well. The Christian sits in his little well and thinks the whole world is his well. The Mohammedans sits in his little well and thinks that is the whole world

19th Sep 1893

If there is ever to be a universal religion, it must be one which will have no location in place or time; which will be infinite like the God it will preach, whose sun will shine upon the followers of Krishna and of Christ, on saints and sinners alike, which will not be Brahminic or Bhuddhistic, Christian or Mohammedan, but the sum total of all these, and still have infinite space for development..will embrace every human being

feb 3

Kamaraj A Study என்கிற புத்தகம் புகழ் வாய்ந்த பத்திரிகையாளர் வி கே நரசிம்மன் அவர்களால் எழுதப்பட்ட ஒன்று. என்பிடி நிறுவனம் அதன் தமிழ் பதிப்பை 2014ல் காமராஜர் ஓர் ஆய்வு எனக் கொணர்ந்தது. தமிழில் நாக. வேணுகோபாலன் மொழி பெயர்த்துள்ளார்.

250 பக்கங்கள் உள்ள இந்த புத்தகம் காமராஜர் குறித்த முக்கிய புத்தகமாக கருதப்படுகிறது. காமராஜர் எழுத்தும் பேச்சும் என பிற தலைவர்களுக்கு இருப்பது போல் வால்யூம்கள் ஏதும் கிடையாது. காமராஜர் அப்படி எழுதி எதையும் நமக்கு தந்து செல்லவில்லை. களப்பணியில் நம்பிக்கைவைத்து விருதுநகரின் மனிதர் இந்தியாவின் உயர்ந்த தலைவர்களில் ஒருவராக மாறிய சித்திரத்தை நரசிம்மன் எந்தவித உயர்வு நவிற்சியும் ஆராதனைகளும் இல்லாமல் தந்திருப்பார்.

இந்த புத்தகத்தின் பின்னுரையை நரசிம்மன் புதல்வர் நாரயணன் எழுதியிருப்பார். அதில் காமராஜருடன் நரசிம்மன் அவர்கள் நடத்திய 1970 ஏப்ரலில் உரையாடலின் சில பகுதிகள் தரப்பட்டிருக்கும். அரசாங்கத்திற்கும் அதனை உருவாக்கிய கட்சிக்குமான உறவு குறித்தும் அந்த உரையாடல் செல்லும். இந்திராவுடன் முறிவு வந்து பழைய காங்கிரஸ் தலைவர்கள் சிண்டிகேட்டாக செயல்பட்ட நேரமது. இனி கர்மவீரர் மொழியில்…

எனது இந்திரா எதிர்ப்புகொள்கை திட்டம் சம்பந்தப்பட்டதல்ல. கட்சியில் வலிமைவாய்ந்த கூட்டுத்தலைமையை நேரு மறைவிற்குப் பின் என் மனம் விழைந்தது. ஒத்த கருத்தை உருவாக்குவதே என் ( காங் அகில இந்திய தலைவராக) முயற்சியாக இருந்தது.

தலைவரின் நுண்ணறிவு, உயர்ந்த இடம் என்பதைவிடகட்சியின் அடிமட்டத் தொண்டனின் கருத்தும் நலமுமே எனக்கு முக்கியம். அரசாங்கம் என்பது கட்சியின் கருவி…

நான் எப்போதுமே கட்சி நலன் என்ற பெரிய விஷயத்தையே பார்த்தேன். கூட்டுத்தலைமை, ஒருமித்த கருத்து இதெல்லாம் இந்திராகாந்திக்கு சவுகரியமாக இல்லை என உணர்ந்தேன். இப்படி வித்தியாசப்பட்டு போனதால்தான் பிளவு உண்டாயிற்று. கட்சி கட்டுப்பாட்டுக்கு வெளியே அரசாங்கம் இருக்கவேண்டும்

என்பது அவர் எண்ணம். முற்று முழுதாக அவரையே சார்ந்த ஒரு கட்சி இருந்தால் மட்டும்தான் அது முடியும்.

காங்கிரஸ் ஸ்தாபனம் அரசாங்கத் தலைவரைவிட தனிப்பட்ட எந்த தலைவரையும்விட முக்கியமானது என்று கட்சியின் மூத்த சகாக்கள் அந்த அந்த மாநிலத்தில் நிரூபித்துக் காட்டவேண்டியதும், மக்கள் தம் பக்கம் என்உ நிரூபித்துக்காட்டவேண்டியதும் அவர்களின் பொறுப்பாயிருக்கிறது. மூத்த சகாக்கள் இப்படி செய்தால் நடத்திக்காட்டினால் மீண்டும் ஒன்று சேர்வதும் சாத்தியமாகும்.

காமராஜர் தொடர் தேர்தல் தோல்விகளை சந்தித்தார். திமுகவின் ஆட்சி துவக்கத்தையும், எம்ஜிஆரின் அண்ணா திமுக உதயத்தையும் அவர் கண்டார். எந்த ராஜாஜி சுதந்திரா கட்சியால் காங்கிரஸ் முதல்முறை திமுகவை கொண்டு தோற்கடிக்கப்பட்டதோ, அதே ராஜாஜி சுதந்திராவுடன் அவர் திமுக இந்திரா காங் கூட்டணியுடன் மீண்டும் தோற்றார். ராஜாஜியை அதற்கு காரணமாக்கக்கூடாது என்ற பெருந்தன்மையை நேர்மையை காமராஜர் வெளிப்படுத்தினார். துக்ளக் சோ அவர்களுக்கு அவர் அளித்த பேட்டிகளில் தலைவர் என்பதின் உயர் பண்புகளை அவர் வெளிப்படுத்தியிருந்தார். தான் மரணம் அடைவதற்கு சில மணிநேரங்களுக்கு முன்பாக கூட தன்னை சந்தித்த பா.ராமச்சந்திரனிடம் உடம்பை பார்த்துக்கொள், வட ஆற்காடு பழுத்த காங்கிரஸ்காரர் சிரமத்தை பார்த்து அவருக்கு கொஞ்சம் பண உதவி செய்ய வேண்டினார்.

காமராஜர் எதிர்பார்த்தது நடவாமல் போன வரலாற்றை நாம் பார்த்தோம். ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்கள் பொதுவாழ்வில் பெரும் மதிப்பை பெற்றும் மக்களிடம் ஆதரவை பெறாமல் போனார்கள். நேருவின் மறைவிலிருந்தே பிரதமர் பதவிக்கு வெளிப்படையாக போட்டியிட்ட மொரார்ஜியால் லால்பகதூர், இந்திராவிடம் வெல்லமுடியாமல் போனது. எமர்ஜென்சிக்கு பின்னரான ஜனதா காலத்தில்தான் மொரார்ஜி விருப்பம் பூர்த்தியானது. அதுவும் முழு ஆட்சிக்காலமாக இருக்கவில்லை. காமராஜர் அதை பார்க்கவும் இல்லை. ஜெயபிரகாஷ் தலைமையில் ஜனதா மாற்றம் அனுபவம் நடந்தேறியது..

தன் இறுதி நாட்களில் நான் பேச என்னவிருக்கிறது..நான் பேசுவதைக் கேட்க யார் விரும்புகிறார்கள் என காந்தி போலவே உணர்வுகொள்பவராக காமராஜர் இருந்தார்.

எமர்ஜென்சி அறிவிக்கப்பட்ட மூன்று மாதங்களில் அக்டோபர் 2, 1975ல் காமராஜர் மறைந்தார். அவர் புவனேஸ்வர் மாநாட்டில் காங்கிரஸ் தலைவராக கீழ் கண்ட செய்தியை விடுத்தார்

நமது நாளந்திர வாழ்வில் காந்திய உணர்வுகள் பிரதிபலிக்க வேண்டுமென கேட்டுக்கொள்கிறேன். காந்தியின் புனிதமும் மேன்மையுமானவற்றில் இரண்டு பண்புகள் உயர்வானவை. அவை வாழ்வில் எளிமையும் மானிட சேவையுமாகும். இந்த இரு சாதாரணக் கருவிகள் மூலம் நாளைய இந்தியாவை நமது கனவுகளுக்கேற்ப படைக்க இயலும்.

கர்மவீரர் காமராஜர் இதை சொல்லிச் சென்று 60 ஆண்டுகள் நெருங்கப்போகின்றன. நாம் நமது கனவுகளுக்கேற்ற இந்தியாவை படைத்த உணர்வை பெறவில்லை..இனி எத்தனை தலைமுறை தேவைப்படுமோ…

feb 3

'ஏன் எழுதுகிறேன்' என்கிற தொகுப்பை நண்பர் கே பி நாகராஜன் சிறப்பாக கொண்டுவந்து தமிழ் மக்களிடம் சேர்த்துள்ளார். சந்தியா பதிப்பக நண்பர் நடராஜனின் உற்சாகமூட்டல், நாகராஜனை இயக்கி வேகப்படுத்தியுள்ளது. 35 பேர்களிடம் பெறுவது என்பதும், அவற்றை பெற்று நூலாக்கம் செய்வது என்பதும் எளிய வேலையல்ல. இதில் இடம் பெற்றுள்ளவர்கள் தங்களின் எழுத்து குறித்த பார்வையை , சுய அனுபவம்- வாழ்க்கை கதையுடன் சேர்த்து தந்துள்ளனர்.

க நா சு 1992 ல் இவ்வாறு எழுதியுள்ளது கூட நாகராஜன் தொகுப்பிற்கு பொருத்தமானதாக எனக்குப்படுகிறது.

" எதற்காக எழுதினேன் என்கிற கேள்வியைத் தன்னைத் தானே கேட்டுக்கொண்டு, அதற்கு எழுத்தாளர்கள் தரக்கூடிய பதில் மிகவும் சுவாரஸ்யமாகத்தான் இருக்க முடியும். எத்தனை இலக்கியத்தரமான எழுத்தாளர்கள் இருக்கிறார்களோ அத்தனை விதமான பதில்கள் இருக்கும். அதுவும் விசேஷம் தான்"

இந்த அளவுகோலில் நாகராஜன் அவர்களின் தொகுப்பும் ' விசேஷம் தான்' எனச் சொல்லமுடியும். தமிழ் எழுத்துலகில் நல்ல முயற்சி. நாகராஜனுக்கும், சந்தியா நடராஜனுக்கும் நல்வாழ்த்துகள்!

எழுத்தாளர்கள் எனில் அதற்கு 'இலக்கிய கர்த்தாக்கள்' என்ற ஒற்றைப் பரிமாணம் மட்டும் தானா என்கிற ஜனநாயக கேள்வி எப்போதாவது நாகராஜனிடம் எழுந்திருக்கலாம் என்றே எனக்குத் தோன்றுகிறது. இல்லையெனில் இத்தொகுப்பில் எனக்கு இடம் கிடைத்திருக்காது. இலக்கிய உலகு குறித்த எந்த பயிற்சியும் எனக்கு இல்லை. சிறுகதை, நாவல், கவிதை என வாசிப்பனுபவம் இல்லாத raw material மனிதன் நான்.

நான் எழுதிப் பார்த்தவை எல்லாமே, இன்றும் சமூகத்தின் அரசியல் பொருளாதார , ஒழுக்க நெறி - நாகரிகம் குறித்த எதிரும் புதிருமாக ஆட்டிப்படைக்கும் உரையாடல்களும் இழுப்புகளும் தான். இலக்கிய வாசனை இல்லாத ஒருவனுக்கும் இதில் இடம் கொடுத்த , பெரும் வாசிப்பாளர் நாகராஜன் அவர்களுக்கு என் நன்றி.

மேலும் பல்வேறு ஆக்கங்களை தந்து தமிழ் மண் பயனுற அவர் வினையாற்றுவார். அவரின் தாகத்திற்கு வாழ்த்துகள்.

feb4

சுகதேவ் குற்றச்சாட்டும் பகத்சிங் விளக்கமும்

காதல் குறித்த உரையாடல்

ஹிந்துஸ்தான் சோசலிஸ்ட் ரிபப்ளிகன் அசோசியேஷன் கூடி ஏப்ரல் 8 1929ல் டெல்லி மத்திய சட்டமன்றத்தில் குண்டுவீசுவதற்கு இரு தோழர்கள் என முடிவெடுத்தது. பகத்சிங் தன்னை அனுப்பவேண்டுகிறார். அது ஏற்கப்படவில்லை. சுகதேவ் அக்கூட்டத்தில் பங்கேற்கவில்லை. முடிவையறிந்ததும் பகத்சிங் பெண் மீதான மோகம் ஒன்றால் தப்பிக்க நினைத்ததாக சுகதேவ் குற்றம் சாட்டினார்- escapism due to his fascination for a certain women என்பது சுகதேவ் மனதிலிருந்து வந்தவை. இந்த சுடும் சொற்கள் பகத்சிங்கை காயப்படுத்தின. மீண்டும் கூட்டத்தைக் கூட்டி பகத்சிங்கும் பதுகேஸ்வர் தத்தும் குண்டெறிய செல்வது என்கிற முடிவை எட்டுகின்றனர்.

தனது நெருங்கிய நண்பன் சுகதேவிற்கு ஏப்ரல் 5, 1929ல் பகத்சிங் கடிதம் எழுதுகிறார். அது காதல் வயப்படுதல் குறித்த நல்லதோர் உரையாடலாகவும் அமைந்தது. புரட்சியாளர்கள் காதல் வயப்படுவதில் தவறேதுமில்லை. உயர் இலட்சியத்திற்காக எதையும் இழக்கவும் தயாரான மனநிலைக்கு செல்லவேண்டும் எனவும் அக்கடிதம் பேசுகிறது. இக்கடிதத்தை சிவ் வர்மா நேரிடையாக சுகதேவிடம் சேர்ப்பித்தார்.

அக்கடிதத்தில்..

அன்பான சகோதரா

இக்கடிதம் கிடைக்கும் நேரம் நான் தொலைதூரம் சென்றிருப்பேன். எனது இறுதி பயணத்திற்கு தயாரான இந்நாட்களில் நான் மிக மகிழ்வுடன் இருக்கிறேன் என நம்பு. எனது வாழ்வின் சந்தோஷங்களில் இனிய நினைவுகளில் ஒரு விஷயம் என்னை உறுத்துகிறது. எனது சொந்த சகோதரன் என்னை தவறாக புரிந்துகொண்டு எனது பலவீனம் என பெரும் குற்றச்சாட்டை வைத்ததுதான்.

உனது சந்தேகம் ஆதாரமற்றது. தவறான புரிதல். நான் கொஞ்சம் வாயாடி- எல்லாவற்றையும் சொல்லிவிடுபவன்- சகஜஜீவி. அது என் பலவீனமாக

புரிந்துகொள்ளப்பட்டுள்ளது. நான் பலவீனமானவன் இல்லை. நம் எவரையும்விட பலவீனமானவனும் இல்லை.

எனது அருமை சகோதரா, உனது சந்தேகத்தைப்போக்கி தெளிந்த மனதுடன் விடைபெறுகிறேன். இதற்காக உனக்கு நன்றியுடையவனாக இருப்பேன். நீ கவனமாக இரு. அவசரப்படாதே. கவனமாக சிந்தி. அமைதியாக அதேநேரத்தில் 'சீரியசாக' காரியத்தை நீ செய்யவேண்டும். சந்தர்ப்பத்தை கட்டாயப்படுத்தாதே. மக்களுக்கான உன் கடமையை ஜாக்கிரதை உணர்வுடன் எடுத்துச் செல்.....

சரி நமது விவாதம் தொடர்பாக என் தரப்பை சொல்கிறேன். வாழ்வின் அனைத்து வண்ணங்களிலும் எனக்கு நாட்டமுண்டு. ஆனால் பொருத்தமான தருணத்தில் எதையும் விட்டுவிட என்னால் முடியும். அதுதானே தியாகம் என்பது. அது நமது பாதையை தடுக்காது. அதற்கான சாட்சியம் உனக்கு விரைவில் கிடைக்கும். ஒருவரைபற்றிப் பேசும்போது காதல் அவருக்கு உதவியதா எனப் பார்க்கவேண்டும். ஆமாம். மாஜினிக்கு அது உதவவே செய்தது...... love என்பது ஒருவகை emotion. அது மிருகத்தன உணர்வல்ல.

உண்மையான காதல் ஒருவரை உயர்த்தும். சினிமாவில் காட்டப்படுவதுபோல் மிருகத்தனத்திற்கு பலியாகும் பெண்கள் போல் இந்தப் பெண்களை பைத்தியம் என நாம் கருதக்கூடாது. உண்மையான காதலை எவரும் உருவாக்கிவிடமுடியாது. அது சுரக்கும். ஆண் பெண் காதல்வயப்பட்டு உணர்வுகளுக்கு மேல் உயர்ந்து நிற்கமுடியும். கட்டுப்பாட்டுடன் தூய்மையாக இருக்கமுடியும். மனசாட்சியின்படி நாம் நடக்கும்போது அன்பு, வெறுப்பு போன்ற மனித உணர்வுகளை கட்டுக்குள் வைத்து வெல்லமுடியும்.

நான் ஒருவர் மற்றவர்மீது காதல் வயப்படுவதை விமர்சித்துள்ளேன். ஒருவரிடம் மட்டுமே அடங்கிவிடாது மானுடத்தின் மீதான பரந்த அணைப்பைக்கொண்ட காதல் அவசியமானது. நான் என் தரப்பை தெளிவுபடுத்திவிட்டேன். ஆர்யசமாஜிகள் பேசும் pure morality வேண்டாம்.

நாம் நமது பலவீனங்களை புரட்சிகரமாக உரக்கப்பேசி மறைத்துவிடலாம். ஆனால் உண்மையான வாழ்க்கை நடுக்கம் தருவது. தீவிர இலட்சியவாதம் எனும் பலவீனத்திலிருந்து வெளியே வா சகோதரா.. இப்படி பலவீனங்களுக்கு

இரையாகும் என் போன்றோரிடத்தில் கோபமடையாதே- கடுஞ்சொல் வீசாதே. அவர்கள் உனது இரக்கத்திற்குரியவர்கள். கருணை காட்டு. அதுதான் அவர்களுக்கு தேவைப்படுகிறது. ஆனால் அது போன்ற ஒன்றிற்கு இரையாகாமல் உன்னால் இவற்றை புரிந்துகொள்ளமுடியாது.

ஏன் இதெல்லாம் எழுதுகிறேன். எனது மனதை திறந்து காட்ட விரும்பினேன். என் மனப்பாரத்தை இறக்கிவைத்துவிட்டேன்.. உனது வாழ்வின் வெற்றிக்கும் மகிழ்ச்சிக்கும் எனது வாழ்த்துகள்

உனது பகத்சிங்

feb 4

சுபாஷ் போஸ் ஜூலை 6, 1944 அன்று காந்திஜி அவர்களுக்கு நீண்ட கடிதம் ஒன்றை எழுதியுள்ளார். மகாத்மாவின் மீதான முழு மரியாதையை அதில் வெளிப்படுத்தியும், தான் வெளிநாடு சென்று ஆயுதம் தாங்கிய யுத்த முஸ்தீபுகளை செய்ய ஏன் நேர்ந்தது என்கிற தன்னிலை விளக்கத்தையும் அதில் அவர் தந்திருப்பார்.

அசோக் வாஜ்பேய் தொகுத்துள்ள 550 பக்க அளவிலான புத்தகத்தில் இந்தக் கடிதமும் இடம் பெற்றுள்ளது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் செல்வாக்கிற்கு உட்படாத அரசாங்கங்களின் ஆதரவை பெறுவதும், ஆங்கு வாழ்கிற இந்தியர்களை இராணுவ வீரர்களாக திரட்டி யுத்தத்திற்கு தயாராக்குவது மட்டுமே விடுதலையைத் தரும் என நம்புவதாக அதில் போஸ் குறிப்பிட்டுள்ளார். காந்தியின் குவிட் இந்தியா அறைகூவலை சுபாஷ் வரவேற்கிறார். ஆனால் அதை ஏற்று நாட்டு மக்கள் தங்களைத் தாங்களே விடுதலை செய்துகொள்வார்கள் என்றோ, பிரிட்டிஷார் குவிட் செய்வார்கள் என்றோ நம்பிக்கை தனக்கு இல்லாததால், வெளிநாட்டு வாழ் இந்தியர்களின் ஆயுதம் தாங்கிய போராட்டத்தை தான் மேற்கொள்ள விரும்புவதாக அதில் தன் விளக்கத்தை தந்திருப்பார்.

உள்நாட்டில் மக்களின் பேரன்பை பெற்று வாழ்ந்திருக்க முடியும் என்றாலும், அபாய சோதனைகளை தான் மேற்கொள்வது இந்திய விடுதலைக்காகவே என்றும், ஒரு நாளும் தான் துரோகியாகிவிட மாட்டேன் என்றும் வாக்குறுதி தருகிறார். அவர் கடித வரிகள் இப்படி முடிகின்றன

Father of our Nation- in this holy war for India’s liberation, we ask for your blessings and good wishes.

கடிதத்தின் ஆரம்ப பகுதியில் மகாத்மா காந்தி என்ற பெயருக்கு உலகில் எவ்வளவு செல்வாக்கும் நற்பெயரும் இருக்கிறது என தான் உணர்ந்ததைக் குறிப்பிட்டுள்ளார் சுபாஷ். இந்திய நிலைமைகளை வேறு எவரையும் விட நீங்களே நன்கு அறிந்தவர் என்பதையும் சுபாஷ் அக்கடிதத்தில் சுட்டிக்காட்டுகிறார். இந்தியர்களின் எழுச்சிக்கு காரணம் காந்திஜி எனவும் சுபாஷ் எழுதியுள்ளார்.

“ for Indians outside India, you are the creator for the present awakening in our country. In all their propaganda before the world, they give you that position and respect that is due to that position..in all

the countries free from British influence that I have visited since I left India in 1941, you are held in the highest esteem, as no other Indian political leader has been, during the last century..”

- pages 157-162 India Dissents Edited by Ashok Vajpeyi

feb 5

பேராசிரியர் சுகடா போஸ் எழுதிய நேதாஜி குறித்த புத்தகம் His Majesty's Opponent 2011ல் வெளிவந்தது. ஒரு புத்தகத்தில் நேதாஜி குறித்து அறிய விரும்புவர்களுக்கு இவ்வாக்கம் உதவும். Sugata நேதாஜி சுபாஷ் போஸ் அவர்களின் அண்ணன் சரத் போஸ் அவர்களின் பேரன். டாக்டர் சிசிர்குமார் போஸ் அவர்களின் புதல்வர்.

இப்புத்தகம் குறித்து அமர்த்யா சென் this book makes a major contribution to the understanding of the political social and moral commitments of Netaji என்று எழுதினார்.

சுகடா அவர்கள் NRB சார்பில் சேகரிக்கப்பட்ட ஆவணங்களை பயன்படுத்தி எழுதியுள்ளார். முடிந்தவரை தகவல்கள் விட்டுப்போகாமல் கொடுத்துள்ளார். குடும்ப மற்றும் rare photos இணைத்துள்ளார். சுகடா முன்வைக்கும் சில விமர்சனங்களை ஒருவர் ஏற்கமுடியாமல் போகலாம். நேதாஜி குறித்த நேர்த்தியான புத்தகம் என்றே இதை சொல்லவேண்டும்.

feb 5

Smt சித்ரா பாலசுப்ரமணியன் அவர்கள் காந்தியடிகளின் 150 ஆண்டையொட்டி தொடர்ந்து வினையாற்றிக்கொண்டிருந்தார். அதன் ஒரு பகுதியாக பொதிகை- இன்று DD Tamil - சார்பில் தோழர் விஜயன் குழுவினருடன் இணைந்து பல நேர்காணல்களை செய்தார். அப்படி செய்யப்பட்ட 16 நேர்காணல்களை தொகுத்து தன்னறம் நண்பர்கள் 'செயலறம்' என்கிற அருமையான புத்தகத்தை கொணர்ந்துள்ளனர்.

அதன் வெளியீட்டு விழா குறித்த செய்தியை விரிவாக காந்தி கல்வி நிலைய சரவணன் அவர்கள் பதிவு செய்துள்ளார். திருமதி டாக்டர் பிரேமா, திரு மோகன், திரு சரவணன் உள்ளிட்ட அனைவருக்கும் பாராட்டும் நன்றியும்.

செயலறம் உருவாக்கத்தில் தன்னற குழுவினர், சித்ரா, விஜயன் குழுவினரின் உழைப்பு அசாதரணமான ஒன்று. பேட்டிகளை பொறுமையாக செவிமடுத்து தட்டச்சு செய்வதற்கு பெரும் பொறுப்பும் பொறுமையும் வசப்படவேண்டும். கேள்விகளையும், உரிய பதில் விளக்கங்களையும் காட்சியிலிருந்து சரியாக பிரதியாக்கம் செய்யவேண்டும். தன்னறம் தோழர்களும், சித்ரா அவர்களும் நிதானமாக அலுப்புகொள்ளாமல் பிரதியை திரும்பத் திரும்ப ஒப்பிட்டு வாசித்து நூலாக்கம் செய்துள்ளனர். அவர்களின் பெரும் உழைப்பிற்கு வணக்கம்.

சித்ரா அவர்கள் தன்னளவில் காந்திய இலக்கிய கிடங்கின் ஆழ அகலங்களை ஆய்ந்து வருபவர். தன் உரைகளின் வழி சரியான புரிதலை வெளிப்படுத்தி வருபவர். அவரது மண்ணில் உப்பானவர்களை உவப்பான படைப்பாக தமிழகம் உணர்ந்தது. அவரது உரைகளுக்கு அவர் எடுத்துக்கொள்ளும் உழைப்பை கேட்பவர் உணரமுடியும்.

தான் கண்ட நேர்காணல்களில் , யார் எவர் அவரது உலகம் என்ன வாசிப்பனுபவம் செயல் களம் எவ்வாறு அமைந்துள்ளது போன்ற முன் ஆய்வுகளை செய்த பின்னரே அவர் பேட்டிகள் நடந்துள்ளன- என்பதை இந்நூலை வாசிக்கும் எவரும் உணரமுடியும். காந்தியடிகளின் பிரம்மாண்டத்தை, அவர் வாழ்வுப் போக்கின் சில சுவடுகளை பன்முக கோணத்தில் வெளிப்படுத்த வேண்டும் என்கிற முயற்சியில்

தனது 150 கேள்விகள்  மூலம் , இந்த 16 பேர்களைக் கொண்டு , பொம்மலாட்டம் போன்ற நிகழ்கலை ஒன்றை சித்ரா செய்திருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது.

திருமதி சித்ரா, விஜயன், தன்னறம் நண்பர்களுக்கு பாராட்டும் வாழ்த்துகளும்..

feb 5

Nehru wrote so in his Glimpses of world History

" There is an old Latin saying which means that those whom gods wish to destroy they first drive mad"

Page 253/1155

feb 6

பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை என்கிற நூலை டாக்டர் அம்பேத்கர் 80 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதினார். முதலில் 1940 லிலும், அடுத்து சற்று மேம்படுத்தி 1945 லும் அம்பேத்கர் இந்நூலை விரிவாக எழுதினார்.

இந்து, முஸ்லிம் இருசாராரும் இந்நூலை வெறுத்ததாகவும், தான் நடுநிலையுடன் எழுதியிருப்பதாகவும் அம்பேத்கர் தன் உரையில் சொல்லியிருப்பார். பாகிஸ்தான் என்கிற கோரிக்கை குறித்த ஆய்வு நூலாக மட்டுமல்லாமல், இந்திய வரலாறு - அரசியல் குறித்து விவரங்கள் கொண்ட நூல் என்பதால், தனது இந்த ஆக்கத்தை இந்திய அரசியல் களஞ்சியம் என அம்பேத்கர் அழைத்தார்.

பாகிஸ்தான் கோரிக்கையை வைத்து முஸ்லீம்கள் பேசுகின்ற வாதங்கள், பிரிவினைக்கு எதிராக இந்துக்கள் முன்வைத்த வாதங்கள் என இரு தரப்பு வாதங்களை அம்பேத்கர் இதில் அலசி தன் ஆய்வுப் பார்வையை வெளிப்படுத்தியிருப்பார்.

தேசம், தேசப்பண்புகள் போன்ற கருத்தாக்கங்களை தன் பார்வையில் விவரித்திருப்பார். அதேபோல் இந்தியா என்பது காலம்காலமாக இருந்த ஒன்றா என்ற கேள்வியையும் எழுப்பி விவாதித்துள்ளார். இந்தியா முழுவதற்கும் மேலாதிக்கம் செய்யும் ஒரே மத்திய அரசாங்கம் என்பது குறித்தும் தன் சந்தேகங்களை அன்றைய சூழலில் விளக்குகிறார்.

பாகிஸ்தான் கோரிக்கையை விளக்குவது என்பதைத் தவிர ஆதரிப்பது என்பதல்ல , அதே நேரத்தில் தனக்கு தெளிவான கருத்துக்களும் உண்டு என்பார் பாபாசாகேப். காங்கிரஸ் அக்கோரிக்கையை நிராகரிக்க வைக்கும் வாதங்களின் போதாமையையும் சுட்டிக்காட்டியிருப்பார். பாகிஸ்தான் திட்டம் கணக்கில் எடுக்கப்படவேண்டிய ஒன்று, அப்படியே நிராகரித்துவிட முடியாது என்றும் பேசியிருப்பார்.

இந்தியர் அனைவரும் ஒரு தேசமாக உருவாகும் இயக்க நிகழ்வில் இருக்கிறார்கள் என்ற புரிதலையும் அவர் வெளிப்படுத்துகிறார்.

“ திரு காந்தியும் திரு ஜின்னாவும் அண்மையில் ( 1944 காந்தி ஜின்னா பேச்சுவார்த்தை) பேச்சுவார்த்தைகள் நடத்தியபோது பாகிஸ்தான் பிரச்சினை சம்பந்தமாக இந்த நூலை ஒரு பயனுள்ள ஆதார நூலாகக் கொள்ளலாம் என்று குறிப்பிட்டிருப்பது இந்நூலின் சிறப்புக்கு ஒரு சான்று” என்பதையும் அம்பேத்கர் குறிப்பிட்டு சொல்லியுள்ளார்.

தமிழில் 700 பக்கத்தில் டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்பு 15 ஆக இந்நூல் வைக்கப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் வால்யூம் 8 .

வாசகர்கள் கஷ்டப்பட்டு தேடவேண்டிய பல அம்சங்களை, தன் உழைப்பினால் கொண்டு வந்து இந்நூலில் சேர்த்துள்ளதையும், அன்றைய பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியல், சமூக வரலாற்றை சாராம்சத்தை இந்நூலில் பிழிந்து தந்துள்ளதையும் சொல்லி, அவசியம் வாசியுங்கள் என அம்பேத்கர் சொல்லியிருப்பார்.

வாய்ப்புள்ளவர் வாசித்துப் பார்க்கலாம்

feb 6

I have to learn what Hinduism really is. I have felt that it is no part of real Hinduism to have in its fold a mass of people whom I would call untouchables. If it was proved to me that this is an essential part of Hinduism, I for one would declare myself an open rebel against Hinduism itself

M K Gandhi at Mayavaram 1915

feb 7

The coming Loksabha elections- the battle ground need to be set between reloading the democracy and other political social fundamentals of freedom movement

Versus

Enforcing communal dictatorship in the name of religious majoritarianism and unconstitutional state and institutional practices, without even changing the text of the constitution.

Let the wisdom of Indian citizens having right to exercise votes not in the name of any religion or caste , do not fall prey to any totalitarian political tenancy of state power. If unconstitutional state practices allowed continuously, then a day is not far off for the change of text to suit the practices.

Even God has limited power to decide fate of anyone for 1000 years. Let hypocrisy , arrogance and demogaugy be not part of power

feb 7 2024

Glimpses of World History நேருவின் புத்தகம் சோனியா முன்னுரையுடன் 2004ல் மீள்பதிப்பைக் கண்டது. பெங்குவின் கொணர்ந்தனர். 1150 பக்க அளவிலானது. நேரு சிறைவாசத்தின்போது தன் மகள் இந்திராவிற்கு கடிதமாகஎழுதி அடுக்கி பின்னர் நூல் வடிவம் பெற்ற ஒன்று.

பாபர் குறித்து தனிக் கடிதம் ஒன்றை - செப் 3, 1932 தேதியிட்டது- இந்த நூலில் பார்க்க முடியும். நேருவின் 88 வது கடிதமாக அதைக் காட்டியிருப்பர். அக்கடிதம் நீண்ட ஒன்று. பாபர் சாமர்கண்டில் தன் தந்தையின் மரணத்தையடுத்து 11 வது வயதிலேயே ராஜ்ய நிர்வாகத்திற்கு பொறுப்பேற்றவர். இந்தியாவில் அவர் இருந்த ஆண்டுகள் 4 மட்டுமே. பாபர் 1530 ல் தன் 49 ஆம் ஆண்டில் மரணித்தவர்.

நேரு இந்தியா குறித்த Babar Memoirs லிருந்து சில பகுதிகளை இக்கடிதத்தில் இந்திராவிற்கு எழுதியிருந்தார். அதிலிருந்து சில பாராக்கள்..

“ The chief excellence of Hindustan is that it is a large country and has abundance of gold and silver..Another convenience of Hindustan is that the workmen of every profession and trade are innumerable and without end. For any work and any employment, there is always a set ready, to whom the same employment and trade have descended from father to son for ages”

இங்கு பாபர் தந்தை மகன் என வழிவழியாக தொழில் செய்திட எந்த வேலைக்கும் எப்போதும் உழைப்பாளர் இருந்தனர் என குறிப்பதைக் காண்கிறோம்.

பாபர் தன் நினைவுகளில் மேலும் சொல்கிறார். இன்று படிக்கையில் நமக்கு வருத்தம் தரலாம்.

“The country of Hindustan has few pleasures to recommend it. The people are not handsome. They have no idea of charms of friendly society , or of frankly mixing to get her or of familiar inter course.

They have no genius, no comprehension of mind, no politeness of manner, no kindness or fellow feelings, no ingenuity or mechanical invention in planning or executing their handicraft works, no skill or knowledge in design or architecture, no good horses, no grapes or musk melons, no good fruits, no ice or cold water, no good food or bread in their bazaars, no colleges, no candles, no torches, not a candlestick.”

பாபர் வர்ணனை ஒன்று

Hindustan is remarkably fine country. It is quite a different world compared with our countries. Its hills and rivers, it's forests and plains, its animals and plants, its inhabitants and their language, its winds and rains are all of a different nature..even the reptiles are different…the frogs of Hindustan are worthy of notice

இந்துஸ்தான் வளமான, மக்கள் தொகை மிகுந்த வடக்கு தெற்கு கிழக்கு மேற்கு என பரந்த மாபெரும் சாம்ராஜ்யம். அதன் தலைநகர் டெல்லி எனவும் பாபர் குறிப்பிடுவதை நேரு சுட்டிக்காட்டுகிறார்.

இதுவும் 500 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட வரலாறுதான்.

நேரு அடுத்த கடிதங்களில் அக்பர் பற்றியும், முகலாயர் வீழ்ச்சி பற்றியும் இந்திராவிற்கு எழுதியுள்ளார்.

feb 9

1917-18 மாதங்கள் காந்தி விவசாயி தொழிலாளர் போராட்டங்களில் தன்னை முழுமையாக்கிக்கொண்ட காலம். சம்ப்ரான்,அகமதாபாத் மில் தொழிலாளர், கேதா விவசாயிகள் என அப்போராட்டம் ஒன்றையடுத்து ஒன்றாக காந்தியின் செயல்பாட்டு சிறப்பை போராட்டங்களை முன்னெடுக்கும் அழகை வெளிப்படுத்தின.

அகமதாபாத் மில் தொழிலாளர்களை பிளேக் நோய் காலத்திலும் வேலை வாங்கிட பிளேக் போனஸ் என 12 அணா தின சம்பளத்தில் கூடுதலாக்கி கொடுத்தனர். பிளேக் அறிகுறிகள் இல்லை எனவே அந்த 12 அணா இல்லை என்றனர் முதலாளிகள். பிளேக்கிற்கு பின்னர் விலைவாசி உயர்ந்துவிட்டதால் அதை நிறுத்தக்கூடாது என்பது தொழிலாளர் வாதம். சம்பள உயர்வு கேட்டு போராட்டம் எழுந்தது.

காந்தி விவரங்களை இரு பக்கமும் கேட்டறிந்து 35 சத உயர்வுக்காக போராட உறுதி ஏற்போம் என துணை நின்றார். இது குறித்து ஏராள விவரங்கள் இருக்கிறது. அதன் நூற்றாண்டை நினைவு கூர்ந்து 2018ல் விரிவாக நானும் கூட எழுதியுள்ளேன்.

இங்கு நான் சொல்ல வந்தது வேறு முக்கிய விடயம். வேலைநிறுத்தம் நீடித்ததால் தாக்குப் பிடிக்க முடியாத சிலர் இவ்வாறு பேசிக்கொண்டனர். காந்தி சாகேப் சாகும்வரை போராடு என உபதேசம் செய்வார். அவருக்கென்ன நாமல்லவா பட்டினி கிடக்கிறோம் என்று. இதையறிந்த காந்தி உங்களுடன் போராட்டம் முடியும்வரை நானும் ஆகாரமின்றி பட்டினியிருப்பேன் என்கிறார்.

குற்றவுணர்வில் அந்த தொழிலாளர் வேண்டாம் என்கின்றனர். ஆனால் காந்தி முடிவெடுத்தால் அதனால் எந்த துன்பம் என்றாலும் பொறுத்துக்கொண்டு நியாயம் பெறுவதில் உறுதியாக நிற்பவர். அவர் உண்ணானோன்பு துவங்கினார். எவர் குடும்பமும் பட்டினி நிலைக்கு செல்லாமல் இருக்க அந்த தொழிலாளர் வேறு வேலைகளில் ஈடுபடவும் அவர் வேண்டிக்கொண்டார்.

தொழிலாளர் வேலை நிறுத்தங்களில் அப்போது பட்டினி என்கிற பயமும் சேர்ந்தே உளவியலாக தொழிற்படும். தலைவன் தன்னை பட்டினியில் கிடத்திக்கொண்டு

சக தொழிலாளர்களுடன் நிற்றல் என்பது உளவியல் சோர்வை தொழிலாளர்களிடம் போக்கி நம்பிக்கையை பலப்படுத்தும் என்பதை காந்தி இந்த சோதனை மூலம் நடத்திக்காட்டினார்.

இந்த சோதனையை டெலிகாம் இயக்கத்தில் தோழர் குப்தா பலமுறை பட்டினி கிடந்து அதை நடத்திக்காட்டி அந்த தொழிலாளர் மத்தியில் அச்சத்தைப் போக்கி நம்பிக்கையை விதைத்தார். தஞ்சை டி என் சி எஸ் தொழிலாளர்களிடம் தோழர் எம் எம் கோபு அப்படிப்பட்ட பட்டினிப்போரை நடத்தி நம்பிக்கையை உருவாக்கினார்.

தஞ்சையில் மாற்றுத்துணி கூட இல்லாமல் தோழர் ஜெகன் பட்டின் கிடந்து நூற்றுக்கணக்கானவர் வாழ்க்கைக்கு உத்தரவாதம் செய்தார். ஆர் கே வகையறா என ஆர்கே கேஎஸ்கே தலைமையில் பலர் கைது வழக்கு என அப்போரட்டம் சென்றது.

சிறு அளவில் எங்களைப் போன்றவர் எங்கள் ஊர்ப்பகுதியில் இந்த பட்டினி சோதனையை நடத்தி அங்கு அநித்தியமாக இருந்த 150 தின சம்பளக்கார மஸ்தூர்களுக்கு தினசரி வேலை அதன் மூலம் வேலை நாட்கள் அதன் வழி எவரும் விட்டுப்போகாமல் அவர்கள் மத்திய அரசு ஊழியராக நிரந்தரம் பெற விதையை ஊன்றினோம்.

காந்தியின் இந்த exemplariness வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் நம்மிடம் வசப்பட்டால் இங்கு காந்திய வாழ்க்கை முறை துளிர்த்துவிடும்..ஆனால்…

feb 10

மவுண்ட்பாட்டன் அவர்கள் வைஸ்ராயாக வந்தவுடனேயே மார்ச் 22 , 1947 அன்று காந்திக்கும் ஜின்னாவிற்கும் பார்க்க விழைவதாக கடிதம் எழுதினார்.

காந்தி சந்திப்பில் சில சுவாரஸ்ய தகவல்களை பியாரிலால் தனது மகாத்மா வால்யூம் 10 - the last phase part 2ல் தருகிறார். மவுண்ட்பாட்டன் கடிதத்திற்கு காந்தி பதில் எழுதினார். பீகார் கலவரப் பகுதியில் இணக்கம் கொணர்கிற முயற்சியில் இருப்பதைச் சொல்லி, தாங்கள் அழைக்கும்போது அதற்கு செவிமடுக்காமல் இருக்க முடியாது, மார்ச் 28க்கு பின்னர் வருகிறேன் எனத் தெரிவிக்கிறார்.

தனி விமானம் அனுப்பலாமா என்ற வேண்டுகோளை நிராகரிக்கிறார். சிறப்பு ரயில் அனுப்பவேண்டாம் எனவும் சொல்லிவிடுகிறார். இரு பெட்டிகள் அவருக்கும், தோழர்களுக்கும் என ஒதுக்கப்பட்ட மூன்றாம் வகுப்பிலும், சாதாரண மக்களுக்கு இடம் கிடைக்காமல் போனது பற்றி ஸ்டேஷன் மாஸ்டரிடம் புகார் எழுப்புகிறார். கூடுதல் பெட்டி இணைக்கப்படுகிறது.

மார்ச் 31 , 1947 ல் மனு சகிதம் காந்தி வைஸ்ராய் மாளிகைக்கு சென்று மவுண்ட்பாட்டனை சந்திக்கிறார். மவுண்ட்பாட்டன் மனுவைப் பார்த்து நீ அதிர்ஷ்டக்காரப் பெண்- எப்போதும் காந்தியுடன் நீ இருக்கும் போட்டோவைப் பார்த்துவிட்டு என் பெண் பெருமிதமும் பொறாமையும் அடைகிறாள். ஒரு முறை உங்கள் வழிபாட்டு கூட்டத்திற்கு அவளும் வருவாள் எனச் சொல்கிறார்.

காந்தி மவுண்ட்பாட்டனிடம் மனு தங்கள் தோட்டங்களை சுற்றிப் பார்க்க அனுமதி கோருகிறார். வழக்கமான செக் அப் செய்து துப்பாக்கி இல்லையா என நீங்கள் பார்த்துக்கொள்ளலாம் என்கிறார்.

மனுவைப் பார்த்து மவுண்ட்பாட்டன் பதில் சொல்கிறார். இந்த மாளிகை தோட்டம் எல்லாம் உங்களது தான். நாங்கள் டிரஸ்டிகள். இவற்றை ஒப்படைக்கவே நான் வந்துள்ளேன். காந்தியிடம் பார்த்து மனு தங்கள் சீடர் எனவே முழு நம்பிக்கையுடன் இருக்கிறேன். எந்தவித செக் அப்பும் தேவையில்லை என பதில் தந்தார் மவுண்ட்பாட்டன்.

அன்று காந்தியை பார்க்க யார் யார் எந்நேரம் வந்தனர் என்கிற சிறு குறிப்பை பியாரிலால் தருகிறார். விடியற்காலை 5 மணிக்கு ராஜ்குமாரி அம்ரித் கவுர். காலை 6.30 க்கு மவுலானா ஆசாத். காலை நடை. சற்று வலி கூடிய நிலையில் மசாஜ். நேரமில்லை என்பதால் மசாஜ்க்கான நேரம் குறைக்கப்படுதல். நேரு வருகிறார் . மசாஜ் நடந்துகொண்டிருக்கும் போதே அவருடன் உரையாடல். குளிக்கச் செல்கிறார் காந்தி. ராஜாஜி வருகிறார். மனு காந்திக்கு ‘சவரம்’ செய்வதைப் பார்த்து தாத்தாவிற்கு தேர்ந்த ‘ பார்பரும்’ ஆனாய் என ராஜாஜி சிரித்துக்கொண்டே ‘ கமெண்ட்’ செய்கிறார். ராஜாஜியுடன் உரையாடிய பின்னர், தண்ணீர் தொட்டியிலேயே சில நிமிடம் காந்தி கண் மூடி அயர்கிறார். ராஜேந்திர பிரசாத் வருகிறார். சிற்றுண்டியுடன் காந்தி பிரசாத் உரையாடல் நடக்கிறது. இதெல்லாம் முடிய காலை 9 மணியாகிறது. சர்தார் படேல் வந்து வைஸ்ராய் இல்லத்திற்கு காந்தியை அழைத்துச் சென்றார்.

பியாரிலால் இப்படி ஒவ்வொரு அம்சத்திலும் நுணுக்கமாக தகவல்களை தேடித் தருவதைக் காணமுடியும். காந்தியின் நேரப்பாடும் நமக்கு புரிய வரும்.

feb 11

பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் விவாதத் திறனுக்கு மற்றொரு சாட்சியாக நிற்கும் ஆக்கம் அவரது பாகிஸ்தான் நூல். தமிழில் அவரது நூல்தொகை 15- ஆங்கிலத்தில் வால்யூம் 8.

பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை நூலில் ஏராள விவரங்களையும், தேசியம் குறித்த ரெனான் உள்ளிட்ட நிபுணத்துவம் வாய்ந்தவர்களின் மேற்கோள்களையும், காங்கிரஸ்- முஸ்லிம் லீக்- இந்து மகாசபை ஆகிய இயக்கங்களின் முன்வைப்புகளையும் அம்பேத்கர் தன் மேதாவிலாச துணையுடன் அலசி ஆராய்கிறார்.

லீக் பாகிஸ்தான் வேண்டும் என்பதற்கான காரணிகளை எப்படி வைத்தது, காங்கிரஸ் அதை எப்படி மறுத்து தன் வாதங்களை வைத்தது, பாகிஸ்தான் கூடாது எனச் சொல்லிய இந்து மகாசபை என்ன வாதங்களை வைத்தது போன்றவற்றைச் சொல்லி, தனது ஆய்வு கோணத்தில் தான் எங்கு உடன்படமுடிகிறது , எங்கு மறுக்க வேண்டியுள்ளது என்ற 'மெதடாலஜி' யில் அம்பேத்கர் இந்த நூலை எழுதியிருப்பார்.

இந்த நூலில் , பாகிஸ்தானுக்கான இந்துக்கள் பேசும் மாற்று ஏற்பாடு என்கிற பகுதியில் இந்து மகாசபை குறித்து அவர் பேசுகிறார். சாவர்க்கரின் கல்கத்தா மாநாட்டு உரை, இந்துத்துவா புத்தகம் ஆகியவற்றிலிருந்து விரிவான மேற்கோளை அம்பேத்கர் எடுத்தாண்டிருக்கிறார்.

சாவர்க்கரும் ஜின்னாவும் எங்கு சந்திக்கிறார்கள்- எங்கு அவர்கள் பிரிந்து போகிறார்கள் என்ற ஆய்வையும் அம்பேத்கர் முன்வைக்கிறார். லீகிற்கு மாற்றான அமைப்பாக இந்து மகாசபை இருந்து மறைந்துவிடும் ஒன்றல்ல, சுதந்திரத்திற்கு பின்னால் பெரும் கடமைகளை கொண்ட அமைப்பாக அது பணியாற்றும் என சாவர்க்கர் குறிப்பிட்டதை அம்பேத்கர் சொல்கிறார். இந்துஸ்தானி என முன் வைப்பது காந்தியின் வார்தா சூழ்ச்சி என சாவர்க்கர் சொன்னதைக் குறிப்பிடுகிறார்.

முஸ்லீம்கள் ஒரு தேசம் என ஜின்னா சொன்னது போலவே, அவருக்கு முன்பாக இந்துக்கள் ஒரு தேசம் என சாவர்க்கர் பேசி வந்தார். அம்பேத்கர் இங்கு எழுதுவது

“ திரு சாவர்க்கர் உள்ளக் கிடக்கையில் இந்து என்ற சொல்லைப் பற்றிய விளக்கம் இரு நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக உருவாக்கப்பட்டுள்ளது. இந்துவாக இருப்பதற்கு தகுதியாக இந்தியாவை புண்ணிய பூமியாக அங்கீகரிப்பதன் வழியாக முஸ்லீம்கள், கிறித்துவர்கள், பார்சி, யூதர் போன்றவர்களை தவிர்த்தல்- இரண்டாவதாக வேதங்களின் புனிதத் தன்மையை வலியுறுத்தாமல் புத்தர்கள், ஜைனர், சீக்கியர்களை சேர்த்துக்கொள்தல்- இதுதான் சாவர்க்கரின் இந்து மகாசபையின் திட்டம். இந்த திட்டத்தில் சில குழப்பமான அம்சங்கள் இருப்பதை..” அம்பேத்கர் விளக்கிச் செல்வார்.

சாவர்க்கர் திட்டப்படி இந்து ஒருவருக்கு இல்லாத சலுகை எதுவும் முஸ்லீமிற்கு இராது. சிறுபான்மை என்பதால் சலுகை என்பதோ, பெரும்பான்மை என்பதால் தண்டித்தல் இராது. அவர்களுக்கு நிரந்தர ஒதுக்கீடு இருக்காது என அவர்களுக்கு இருந்த சலுகையை சாவர்க்கர் பறிக்க முயற்சிப்பதாக அம்பேத்கர் எழுதியுள்ளார்.

மேலும் தன் புரிதலை அம்பேத்கர் தருகிறார்

“ இந்து முஸ்லிம் இடையே பகைமை எனும் விதையைத் தூவிய பின்னர் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் ஒரே நாட்டில் ( பாகிஸ்தான் இல்லாமல்) வாழவேண்டுமென்று சாவர்க்கர் விரும்புவது விளக்குவதற்கு கடினமானதாகும்”

“ சாவர்க்கர் உருவாக்கிய சுயராஜ்யத் திட்டம், முஸ்லீம்களை அடக்கி ஆளும் சாம்ராஜ்யத்தை இந்துக்களுக்கு வழங்கி அதன் மூலம் தாங்கள் ஒரு ஏகாதிபத்திய இனம் என்ற திருப்தியையும் பெருமையையும் அவர்களுக்கு வழங்கும். ஆனால் அமைதியான எதிர்காலத்தை வழங்க முடியாது….”

இந்த நூலில் முஸ்லீம்களின் மத சமூக பழக்க வழக்கங்கள், முஸ்லிம் பெண்களின் நிலை குறித்து விமர்சனங்கள் இல்லாமல் இல்லை. இஸ்லாம் குறித்த அதன் சகோதரத்துவ உணர்வு குறித்த பாராட்டுக்களும் இருக்கிறது. முஸ்லீம்கள் குறித்த விமர்சனத்தை மனதில் கொண்டு, இந்தநூலை வலது ஆய்வாளர்களில் சிலர் தங்கள் மேடைகளில்தொடர்ந்து பரிந்துரைத்து வருகின்றனர்.

மற்ற இசக்காரர்கள் இந்நூல் குறித்து தங்கள் ஆய்வுப் பார்வையை முன்வைக்காவிடில்- பேசாவிடில், இந்த நூல் குறித்து பேசக்கூடிய ஏக குத்தகை

வலதுசாரிகளிடம் போய்விட நேரலாம் எனத் தோன்றுகிறது. இந்நூலை பலமுறை படித்தவர்கள் தங்கள் பார்வையில் பேசட்டும். பெரிய இந்நூலை படிக்க வாய்ப்புள்ளவர்கள் படித்துவிட்டு பேசட்டும். வலதுகள் மட்டுமே கொண்டாடுவதற்கான முழு குத்தகையை விட்டுவிடாமல் இருப்பது நலம்.

feb 12

ராஜேந்திர பிரசாத் அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்டுள்ளார் என அறிந்து , முன் அறிவிப்பு ஏதுமின்றி காந்தி அவர் வீட்டிற்கு நலம் விசாரிக்க, உடல் நலம் குறித்து அறிவுறுத்தச் சென்றார்(ஏப்ரல் 1947).

பிரசாத் துணவியாரிடம் இன்னும் கொஞ்சம் அவரை கட்டுப்படுத்த கற்றுக்கொள் எனச் சொல்லி காந்தி சிரிக்கிறார். வீடு கலகலப்பாகிறது. பிரசாத் கூட உற்சாகமாகிறார். அங்கிருந்த பெரும் பணக்கார வீட்டுப்பெண் ஒருவர், காந்தியுடன் தொண்டாற்ற அனுமதிக்கவேண்டும் என பிடிவாதம் பிடிக்கிறார். காந்தி தந்த பதிலாக இங்கு பியாரிலால் எழுதியிருப்பது

“ Gandhiji never encouraged people to venture beyond their capacity. He gently reminded her that to walk with him was to walk on the edge of a sharp razor. Those who are in my company must be ready to sleep upon the floor, wear coarse clothes, get up  un unearthly hour, subsist on uninviting, simple food, even to clean latrines. If you want to qualify yourself for all this , come with me…”

மற்றொரு நாள் வழிபாட்டுக் கூட்டம் முடிந்த நிலையில் , தமிழர் ஒருவர் காந்தியிடம் சென்று ஆட்டோகிராப் தமிழில் எழுதிக் கேட்கிறார். ஆட்டோகிராபிற்கு வழக்கமாக நான் பெறுவதைவிட இரண்டு மடங்கு ரூபாய் என்கிறார் காந்தி. அவரும் சரி என்கிறார். இல்லை , நான் தமிழில் பிழையில்லாமல் எழுதிவிட்டால் கூடுதல் ரூ 10 தரவேண்டும் என்கிறார் காந்தி.

ஆட்டோகிராப் கேட்ட தமிழர் என்னிடம் அந்த அளவு பணம் இல்லை என்கிறார். பரவாயில்லை நாளை கொண்டு வந்து கொடுத்தால் கூடப் போதும் என்கிறார் காந்தி. தமிழர்க்கு ஆட்டோகிராப் பெறவேண்டும். கையில் இருந்த மோதிரத்தை அவிழ்த்து காந்தியிடம் கொடுக்கிறார். இதைப் பார்த்துக்கொண்டே வந்த நேரு பேசிய வேடிக்கை வரிகளை பியாரிலால் இவ்வாறு தந்துள்ளார்.

“ so you are at your old game again..I was told that Tamil chetties were the shrewdest business in the world, but ..

The chetty friend interposed : but sir, no one can beat Mahatmaji in the art of emptying people’s pockets. I confess myself beaten “

Gandhi retorted “ No , on the contrary, it is you who have struck a shrewd bargain. You are carrying with you the priceless blessings of the poor”

பீகாரில் ஜமின்தாரர்கள் காந்தியை சந்தித்து, விவசாயிகள் சிலர் நடத்திய வன்முறைகள் பற்றி தெரிவித்தனர். வன்முறையில் ஈடுபட்டிருந்தால் தவறு என்றார் காந்தி. இதையறிந்த விவசாயிகள் ஜமீன்களின் அக்கிரமங்களை காந்தியிடம் தெரிவித்தனர். காந்தி பூமி தன் உப்பு குணத்தை இழந்துவிட்டால், அதை எங்கிருந்து திரும்பப் பெறும். எனவே don't copy crime from anybody ..the lesson of history is that those who seek to destroy others are themselves destroyed in their turn என்கிற அறிவுரையைத் தந்து, சம்ப்ரான் போராட்ட முறையை கைக்கொள்ள மறந்துவிடாதீர்கள் என்றார்.

பீகாரில் சந்தித்த இந்து முஸ்லீம் பிரதிநிதிகளிடம் காந்தி மிக முக்கிய செய்தி ஒன்றை விட்டுச் சென்றார்.

Best repentance for a lapse is never do it again. One should never allow the sun to set on an unconfessed sin..not even the most fallen is beyond redemption..to pray for the well being of all is the best prayer

-Mahatma Gandhi vol 10 part 2 The Last Phase by Pyarelal

## Feb 12 Pension revision  BSNL Absorbed

No question of Fault Finding but for understanding - BSNL pensioners are requested to read the following carefully

Regarding pension revision for bsnl absorbed pensioners, two views are prevailing. One is as that of 3 rd PRC, which would not upset the connectedness existing amongst the employees absorbed as a single class on 1-10-2000. As long as some employees of that single class are existing on a particular date as employees, PRC is the way to solve the issue of pension revision of both pre and post pensioners on a particular cut off date. DOT in its Oct 17 th 2022 also stood for this , but the issue is nil fitment.

The other dominant view is - this is the time to find a permanent remedy by delinking pay revision of bsnl and linking with CPC pensioners - not only to get the benefit of 7 th CPC but for availing straight the benefits of future CPCs. The leaders having this commitment, done their level best and got also CAT judgment, favouring pension revision analogous to CPC benefits .

They are trying to convince DOT also not to go appeal against the CAT judgment. It seems that DOT is tight lipped and non committal in uttering any words regarding that.

Though one need not feel despair, but disappointment spreads amongst the pensioners as their expectations fail by the undue delay in taking a concrete decision and lengthy process of discussions at various levels.

What are the known things with us from the written and authenticated forms as on date:

DOT’s Oct 17 th presentation of 2022, and the leaked note sheet up to DOT secretary’s signature

PB CAT Delhi judgment

DOPT OM dated 16th March 2016 - guidelines to take the appropriate actions on getting the judgment in favour or against the policies of Govt

Two of the associations recent observations on meeting DOT officers concerned

Com Prahalad Rai:

Dir Estt mentioned that matter is under discussion at top level but decision is yet to be taken. He advised to wait. About social media informations, he was non committal.

Com Vara Prasad :

DOT mentally prepared to implement CAT judgment without preferring an appeal. All officers are tight lipped about the actual proposal but we could understand that they have two or three options for implementing the judgment .

It is clear that DOT is interested to find a permanent solution and at par with CG pensioners as we demanded..

..the whole process will take at least 6 months because a policy decision has to be taken to delink pension revision from pay revision and related issues.

After reading all these statements, one may feel

DOT is for pension revision ( known by its written commitment of Oct 17th and the leaked note sheet)

DOT is judiciously examining the CAT judgment in the light of DOPT' s guidelines and may take appropriate action strictly as per the guidelines- whether going for an appeal or implementing the judgment

It seems that DOT is fair enough to implement pension revision analogous to CPC, by the necessary revision of the earlier note sheet which one gone up to DOPPw level or placing as other option to the earlier note sheet in the new light of judgement favouring CPC, circulating to the nodal ministries like DOPw, DOPT, DOLA and finally to DOE of finance to prepare draft cabinet note for approval to issue any pension revision order.

What one can infer:

If the date of pension revision is from 1-1-2017 as per the prayer of the associations in their OA of PBCAT, then it can be as per PRC only. In this case the issue is with post 2017 pensioners. There is no issue in IDA here.

If pension revision is analogous to CPC as per the judgment, then it can be from 1-1-2016, because applicability of CPC cannot be from 1-1-2017 as per the prayer of the associations in their OA. In that case the issue is with post 2016 pensioners. Another issue is regarding CDA. Applicability of CPC means CDA only. The third issue is appropriate amendments in the 37 A rules. It is difficult to presume that We will be allowed by the authorities to avail the best of both CPC and PRC, beyond the present rules as per 37 A.

NFTE is reporting after their negotiations at Dir HR level that wage revision negotiations may start shortly. I do not know if any settlement is reached , what will be the impact of that for post 2017 pensioners . There is no question of 1-1-2016 here for them as their wage revision is due from 1-1-2017.

DOT cannot take its own decision regarding the issue of appeal or no appeal about court cases. It has to follow strictly the DOPT guidelines issued then and there. I do not know if the CAT judgment we are citing has any impact on policy of the GOI or against the present policy (if any so) of GOI that pension revision is linked with pay revision .

The above points of mine are just analysis of the present situation given to me as per the written docs of many sources. I am not finding any faults of any one's steps or sincere actions taken for the welfare of

lakhs of pensioners. Only for understanding of the situation and the process, I have given the above analysis.

Best wishes to all the leaders striving for solution and their laborious works.

12 -2- 2024 9 hrs - R Pattabiraman

feb 13, 2024

பியாரிலால் மார்க்சின் மேலான பங்களிப்பு குறித்த உரையாடல் ஒன்றை காந்தியிடம் நடத்தினார். காந்தி மார்க்ஸின் சிறப்பாக கீழ்கண்ட வரிகளை ஏற்றார்.

From each according to his capacity to each according to his need. ஆனால் இதை அடைய மார்க்சியம் மட்டுமே வழி என காந்தியால் ஏற்கமுடியவில்லை.

பியாரிலால் மார்க்சிய தத்துவம் பற்றி மேலும் காந்தியிடம் எடுத்துரைத்தார். ஆகாகான் மாளிகை சிறைவாசத்தில் கிடைத்த மார்க்சிய இலக்கியங்களை படித்தபோது காந்தி இவ்வாறு கூறியிருந்தார். மார்க்ஸின் மேதமை என்னிடம் இல்லை. ஒருவேளை நான் அந்த அளவு scholarship புலமை பெற்றிருந்தால் அவரைவிட நன்றாக எழுதியிருப்பேன். Marx had the knack of making even simple things appear difficult என காந்தி கருதினார்.

பியாரிலால் உடன் தொடர்ந்த உரையாடலில் கீழ்கண்ட கருத்தையும் காந்தி தன் புரிதலாக முன்வைத்தார்.

“ Marxist wants to abolish the labouring hand altogether and substitute in its place the machine. He has no use for the hand. Dependence on manual labour, according to Marx , is the symbol and root cause of the destitution and slavery of the worker. It is the function of the machine to emancipate him from this state. I , on the other hand, hold that machine enslaves and only intelligent use of the hand will bring to the worker both freedom and happiness.”

மார்க்சை நாம் விமர்சிக்கலாம் ஆனால் அவர் சிறந்த மனிதர் என்பதை மறுக்க முடியாது என்றார் காந்தி.

தன்னைப் பார்க்க வந்த சோசலிஸ்ட் தலைவர்களிடம் எனக்கு வர்க்கங்கள் இல்லாத சாதியற்ற சமத்துவ சமூகத்தில் நம்பிக்கையிருக்கிறது. சோசலிசம் பேசுபவரானாலும் எவருக்கும் body labour obligatory உடல் உழைப்பு கட்டாயமானது. அதில் விலக்கு எந்த காரணத்தாலும் யாருக்கும் கொடுக்க முடியாது என்றார்.

சோசலிசத்தில் நம்பிக்கைக்கொண்ட 15 மாணவர்கள் காந்தியை சந்தித்தனர். சோசலிசம் என்பது பிரச்சாரத்திற்கானது- அதைச் சொல்லி அந்த இசம் நோக்கி பலரையும் ஈர்க்கவேண்டும் எனச் செயல்படுகிறீர்கள். நீங்கள் நடந்து காட்டுவது உங்கள் பிரச்சாரத்தைவிட பலமானது. பலனையும் தரும். சில அன்றாட

வேலைகளுக்கு நீங்கள் உங்களை பழக்கப்படுத்திக்கொள்ளுங்கள். உடல் உழைப்பை கீழானதாக கருதாமல் அதில் ஈடுபடுங்கள் எனச் சொல்லி அனுப்பினார். மாணவர்களாகிய உங்களுக்கு basic tips on practical socialism என கீழ்கண்டவற்றை சொன்னார்.

1. Fold your bedding on getting up in the morning
2. Give a helping hand in preparing and laying out the breakfast
3. Help in dusting and cleaning up the house
4. Wash your own clothes
5. Help your mothers and sisters in cleaning and scrubbing utensils
6. Spin daily to provide yourself with the clothes you need
7. Keep your books and papers neat and tidy
8. Use a two anna steel nib in preference to a fifty rupee worth fountain pen.

காந்தியடிகளின் சோசலிச உரையாடல்கள் குறித்து தோழர் காந்தி என்கிற நூலில் விரிவாக தேடிக்கண்டவற்றை கொடுத்துள்ளேன். வாய்ப்புள்ளவர் தோழர் காந்தி நூலை படித்துப் பார்க்கலாம். இணையத்தில் கிடைக்கக்கூடிய நூல்தான்.

Feb 14, 2024

சோசலிஸ்ட் தலைவர்களாக இருந்த அருணா ஆசப் அலி அசோகா மேத்தாவுடன் காந்தியை மே2, 1947ல் சந்தித்தார். சோசலிஸ்ட்களின் ஏராள கேள்விகளுக்கு காந்தி பதிலளித்தார்.

தான் தனிமையாக செயல்பட நேர்ந்துள்ள சூழலையும் அப்போது வெளிப்படுத்துகிறார். அருணா ஒட்டுமொத்த நாடே உங்களுடன் இருக்கிறது என்கிறார். காந்தியிடம் எந்த உபச்சார வார்த்தைகளும் எடுபடாது. நீங்கள் சொல்வது ஒரு விதத்தில் சரிதான். ஆனால் ஒட்டுமொத்த என்பதில் நீங்கள் எல்லோரும் உண்டுதானே- நீங்கள் ஏற்று என்னுடன் வருகிறீர்களா?

ஜேபி ,பட்வர்தன், அருணா போன்ற நீங்கள் எல்லாம் சாகசக்காரர்கள் என்பதை ஏற்கிறேன். நியாயம் எனச் சொல்லி பிறர் உயிரை எடுக்காமல், தன் உயிரை தியாகம் செய்ய சித்தமானவர்களா- சாதகமான முடிவு தான் எல்லாம் , வழிமுறைகள் அல்லஎன்பதை கைவிடுவீர்களா ? என அவர்களிடம் காந்தி வினவி உணர்த்தினார்.

கல்கத்தா போகப்போகிறேன். நவகாளியை விட மோசமாக இருக்கும், வேண்டாம் என சிலர் தடுக்கின்றனர். குண்டர்கள் எவர் சொல்லையும் கேட்கமாட்டார்கள் எனச் சொல்கின்றனர். அதனாலேயே அங்கு போக விரும்புகிறேன்.

என்னை நம்பி சாவின் விளிம்பிற்கு வரத்தயார் என்றால், என்னுடன் வாருங்கள். இன்று நான் எந்த கட்சியையும் பெற்றிருக்கவில்லை. உங்களில் பலர் பிறப்பதற்கு முன்னரே நான் சோசலிஸ்ட் ஆனவன். தென்னாப்பிரிக்கவிலேயே எனது சோசலிசம் துவங்கிவிட்டது எனச் சொல்லிவிட்டு கீழ்கண்ட வரிகளை சுட்டிக்காட்டுகிறார். பெரிய பெரிய பேச்செல்லாம் விட நடந்து காட்டுங்கள் என்பதான செய்தியை அவர் வாழ்நாள் முழுதும் தந்துகொண்டிருந்தார். அவரது உணர்த்தல் இவ்வாறு அமைந்தது.. .

You are arm chair socialists. Your ideal is to provide a motor car and a bungalow to everybody in India. Till that happens, you will continue to live as at present, without sacrificing any of your comforts. I , on the other hand , believe in putting myself on a level with the poorest and the least here and now..I began to live socialism while I was still in South Africa

By learning the art of dying without killing you can mould India's destiny. There is no other way

காந்தி காட்டும் கண்ணாடியில் அசோகா மேத்தாவும் அருணாவும் மட்டும் தெரியவில்லை. கண்ணாடி பார்த்ததில் எனக்கு என் முகம் தெரிந்தது. என்னுடைய எந்த comfort யையும் குறைத்துக்கொள்ளாமல் சாய்வு நாற்காலியில் மார்க்ஸின் புத்தகம் ஏதாவது ஒன்றுடன் என்கிற காட்சியும் என் முன்னர் நிற்காமல் இல்லை…இந்த கண்ணாடியில் வேறு எவர் போய் நின்றாலும் அவர் முகமும் தெரியலாம்.

feb 15

Thus wrote Jayaprakash Narayan in 1973, though 50 years gone, relevant today even

I know politics is not for saints. I am no saint myself presuming to preach a sermon to others. But politics, at least under a democracy, must know the limits which it' may not cross. Otherwise, if there is dishonesty,corruption, manipulation of the masses, naked struggle for personal power and personal gain, there can be no socialism, no welfarism, no government,no public order, no justice, no freedom, no national unity—in short no nation. There would be utter chaos. I believe that the permissible limits have already been crossed in this country, for which everyone, including the elite, the opposition parties and even the common citizen must take the responsibility. But in the nature of things the persons at the top of the power pyramid must take most of the responsibility.

Feb 15

Gandhism An Analysis என்கிற புத்தகம் 1939ல் வந்த பழைய புத்தகங்களில் ஒன்று . 500 பக்கங்களுக்கு மேலான பெரிய புத்தகம். எழுதியிருப்பவர் இந்தியாவில் செயல்பட்ட ஆரம்பகால மார்க்சியர்களில் ஒருவரான இங்கிலாந்தை சார்ந்த பிலிப் ஸ்பிராட். 1929 மீரட் சதிவழக்கில் சிக்கியவர். தனது தகுந்த மார்க்சிய பயிற்சியுடன் காந்தி குறித்த ஆய்வை செய்துள்ளதாக பிலிப் ஸ்பிராட் தெரிவிப்பார். பிலிப் ஸ்ப்ராட் எம் என் ராய், ராஜாஜியின் சுயராஜ்யா பத்திரிகை என பல தடங்களில் தன் அரசியல் திசைவழிகளை வைத்துக்கொண்டதால் அவரின் இந்த புத்தகம் மார்க்சிய வட்டாரத்தில் பெரிதாக இ எம் எஸ் எழுதிய புத்தகம் போலவோ அல்லது ஹிரன் முகர்ஜியின் புத்தகம் போலவோ பேசப்படாமல் போனது. காந்தியை, மகாதேவ தேசாயை சந்தித்து உரையாடியவர் ஸ்பிராட்.

காந்தியைக் கண்டுணர்தல் மற்றும் தோழர் காந்தி எழுதும் போது இந்த புத்தகத்தை துணைக்கு வைத்துக்கொள்ள முடியாமல் போனது வருத்தமான ஒன்றே. முழுமையான வாசிப்பிற்கு பின்னர் ஸ்பிராட்டின் காந்தி என்பதை புரிந்துகொள்ளமுடியும் என நினைக்கிறேன்.

இங்கிலாந்தில்1939ல் மார்க்ஸ் வாழ்க்கை குறித்து இசையா பெர்லின் எழுதினார். அப்புத்தகம் இங்கு 1942ல் வெ சாமிநாத சர்மா கார்ல்மார்க்ஸ் வாழ்க்கை வரலாற்றை எழுத உதவியது. இசையா பெர்லின் புத்தகம் இன்றுவரை மிகச் சிறந்த மார்க்ஸ் வாழ்க்கை வரலாற்று புத்தகங்களில் ஒன்றாக கருதப்படுகிறது. அதேபோல்1942ல் வந்த வெ சா புத்தகமும் தமிழில் மார்க்ஸ் வாழ்க்கை குறித்த நல்ல புத்தகமாக கருத இடமுண்டு.

அதே 1939ல் இங்கிலாந்திலிருந்து இங்கு வந்து போராடிக்கொண்டு காந்தி குறித்து எழுதிய பிலிப் ஸ்பிராட்டிற்கு அப்படியொரு வெ சா அமைந்திருக்கவில்லை போலும். இல்லெயெனில் 1939 லேயே மார்க்சிய கண்ணோட்டத்தில் காந்தி குறித்து எழுதிய விரிவான புத்த்கம் தமிழர்களுக்கு தமிழில் கிடைத்திருக்கக்கூடும்.. இடதுசாரிகள் மத்தியில் பிலிப் ஸ்பிராட் தன் செல்வாக்கை வரலாற்று time line என்கிற வகையில் வைத்துக்கொண்டிருக்கலாம்.

ஆனால் அவரின் ஆக்கங்கள் பொதுவெளியில் எவ்வித விவாத கவனத்தையும் பெறவில்லை.

ராமச்சந்திர குஹா எழுதிய Rebels Against Raj கடந்த மாதம் வந்த புத்தகம். மற்றவர்களுடன் அதாவது வெளிநாட்டில் பிறந்து இந்தியாவில் தங்கி போராடிய அன்னி பெசண்ட், மீராபென், ஹார்னிமேன் போன்றவர்களுடன்பிலிப் ஸ்பிராட்டை சேர்த்து அவரை rehabilitate செய்துள்ளார்.

பிலிப்ஸ்பிராட்டின் காந்தி குறித்தும் காந்தி கல்வி நிலைய நண்பர்கள் திரு அண்ணாமலை- சரவணன் பரிந்துரைத்த Rebels Against Raj குறித்தும் வாசித்தறிய காலம் எனக்கு அருள்கூறட்டும்.

feb 16

இந்தியாவில் தற்போது வலதுசாரி எழுத்தாளர்களும் விவாதக்காரர்களும் 75 ஆம் ஆண்டு விடுதலையை ஒட்டி இந்திய புரட்சிக்காரர்கள் பலர் குறித்து கரிசனமாக பேசி வருகின்றனர். புரட்சிக்காரராக இருந்த எஸ் என் சன்யால் குடும்பத்திலிருந்து வந்த சஞ்சய் சன்யால் எனும் பொருளாதார வரலாற்றாய்வாளர் திரு மோடி அரசங்காங்கத்தில் பொருளாதார ஆலோசகரும் கூட. அவரும் தன் தாத்தாவை மறந்துவிட்டனர் எனப் பேசிவருகிறார். இந்திய விடுதலையில் புரட்சிக்காரர்கள் பங்கை நாங்கள் வெளியே சொல்வோம் என அங்கிருந்து சில எழுத்தாளர்கள் புறப்பட்டுள்ளனர்.

புரட்சியாளர் ராம் பிரசாத் பிஸ்மில் காகோரி வழக்கில் சிக்கி டிசம்பர் 19, 1927ல் தூக்கு என முடிவானது. அதற்கு முன்னர் நாட்டு மக்களுக்கு அவர் தனது மெசேஜ் ஒன்றை தந்துவிட்டு சென்றார். அதை பகத்சிங் வெளியே கொணர்ந்தார். அந்த செய்தியில் ராம் பிரசாத் பிஸ்மில் அஸ்வகுல்லா கான் பற்றி சொல்கிறார். அஸ்வகுல்லாவிற்கும் அதே நாளில்தான் தூக்கு.

இனி பிஸ்மில் பேசுவதைப் பார்ப்போம்...

அரசாங்கம் அஸ்வகுல்லாவை எனது நெருக்கமான மனிதன் என்கிறார்கள். ஆர்ய சமாஜியான எனக்கு அப்படி ஒரு அருமையான முஸ்லிம் தோழன் right hand man ஆக இருப்பது இந்து முஸ்லீம்கள் தங்கள் சச்சரவுகளை விட்டுவிட நல்ல உதாரணமில்லையா? இந்து இளைஞனைவிட என்னுடன் தியாகம் செய்ய முஸ்லீம் இளைஞன் தலைப்பட்டுள்ளான் என்பதைக் காட்டியுள்ளோம். Now no one shall dare say that Muslims should not be trusted. Ashfaq! May god give peace to your soul.You have saved the honour of mine and all Muslims... Now my only request to countrymen is that if they had even an iota of sorrow at our death, then, with whatever means they must establish Hindu Muslim Unity- that was our last wish and this only can be our memorial..

இந்து முஸ்லீம் ஒற்றுமை அதுவே எங்கள் இறுதி வேண்டுகோள்- அதுவே எங்களுக்கான நினைவு சின்னம் என பிஸ்மில் பேசுவதைக் காண்கிறோம்.

feb 16

மே 29, 1947 காலை நடந்துகொண்டே காந்தியுடன் வந்தவர் பிரிட்டிஷாரே வெளியேறு எனச் சொல்லி போராடியது நீங்கள், ஆனால் அவர்கள் வெளியேறி சுதந்திரம் வருகின்ற இத்தருணத்தில், picture லேயே நீங்கள் இல்லாமல் போய்விட்டீர்களே..உங்களது இலட்சியங்கள் அனைவராலும் கைவிடப்பட்டுவிட்டதா எனக் கேட்கிறார்.who listens me today . Everybody is eager to garland my photos and statues. Nobody wants to follow my advice என்கிறார் காந்தி.

நாட்டில் அதற்கு முன்னர் காட்சிகள் வேகமாக மாறிக்கொண்டிருந்தன. அன்று மட்டும் நேரு தலையிடாமல் மவுனித்து இருந்தால் இன்று காணும் இந்தியா கிடைத்திருக்குமா என ஊகிக்கமுடியவில்லை.

மே 28 அன்று தான் தனது திருத்தப்பட்ட திட்டத்துடன் மவுண்ட்பாட்டன் லண்டனிலிருந்து திரும்பினார். உயர் அதிகாரிகள் இஸ்மேவும் அபெல்லும் எடுத்துச்சென்ற திட்டமே வேறு. நேரு , படேல் உட்பட காங்கிரஸ் தலைமை -Indian union என்பதே உலகில் பிரிட்டிஷ் இந்தியாவின் வாரிசாக தொடரும், பிரிந்து செல்பவர் seceder என்கிற வகையில் புதிதாக அங்கீகாரத்தைப் பெறவேண்டும்- அரசியல் அமைப்பு அசெம்பிளி தொடரும்- மத்திய என்கிற central authority இருக்கும் என பேசி வந்தனர்.

லண்டனுக்கு இஸ்மே எடுத்துச் சென்ற திட்டமே வேறு. அது பால்கனிசேசன் திட்டம். மாகாணவாரியாக சுதந்திரம் என அதில் சொல்லப்பட்டிருந்தது. No central authority- No Constituent Assembly- British India would be reduced to a conglomeration of autonomous units, the successor governments- each unit possessing the right of determining its own future. The 600 Indian princely states would automatically become sovereign-

இத்திட்டம் a complete dissolution of what hitherto was India. சிம்லாவில் இருந்த மவுண்ட்பாட்டன் அங்கு வந்த நேருவிடம் நல்லெண்ணம் எனக்கருதி மே 10, 1947 அன்று அதன் நகலை unofficial ஆகக் காட்டுகிறார். நேரு கடும் கோபத்துடன் பொங்கி ‘இது துரோகம் ’ என அஞ்சாது குரலை உயர்த்தி , ‘நடக்காது ஏற்க முடியாது ’ என உறுதிபட தெரிவித்தார். நேருவின் கடும் எதிர்வினையை கண்ட மவுண்ட்பாட்டன், வி பி மேனனை அழைத்து உடனடியாக revised plan draft யை வைக்க உத்தரவிட்டார்.

வி பி மேனனின் பெரிய மிக முக்கிய புத்தகமான Transfer of Power என்பதில் இது பற்றியெல்லாம் அவர் விரிவான பதிவை செய்திருப்பார். படேலைத்தான் வி பி மேனன், நேருவைவிட அதிகமாக நம்புவார். மவுண்ட்பாட்டன் -லண்டன் மன்னர்பிரான் ஒப்புதலின் வாயிலுக்கு சென்ற -அந்த balakanisation of British India திட்டத்தை நிறுத்த தந்தி அனுப்பினார். புதிய திட்டம் வருவதாக தெரிவித்தார். இந்தியா -பாகிஸ்தான்- சமஸ்தானங்கள் இணைப்பு என்கிற மேனன் draft திட்டம் வல்லபாய்க்கு சொல்லப்பட்டு, நேரு சமாதானப்படுத்தப்பட்டு ஜூன் 3 அன்று மவுண்ட்பாட்டன் திட்டமாக இந்திய விடுதலை அறிவிப்பு வெளியானது.

நேருவை இகழக்கூடிய எவரும், இந்த மே 10 , 1947 காட்சியை வரலாற்று நிகழ்வை மனசாட்சியுடன் நினைத்துப் பார்ப்பார்கள் எனில், அவர்கள் பெருமையுடன் ஆள்வதாக சொல்லும் ஏக இந்தியாவே கிடைத்திருக்காது என்பதை உணர்ந்திருக்க முடியும். வடக்கில் ஏதோ ஒரு மாகாணம் நாடு என்ற பெயரில் அவர்களுக்கு கிடைத்திருக்கலாம்.

நேருவின் கோபமும், மவுண்ட்பாட்டனின் நல்லெண்ண மாற்றமும், நெருக்கடியை சமாளித்து மாற்றக்கூடிய மேனனின் அசாத்திய திறமையும் , படேலின் ஒத்துழைப்பும்தான் இன்று நாம் காணும் இந்திய நிலப்பரப்பிற்கான அன்றைய காரணிகள். மே 10, 1947 இரவின் நொடிகளில் வேகமாக நடந்த காட்சிகளின் மாற்றத்தை - நேரு உருவாக்கியதை வரலாறு உணர்ந்தவர் எவரால் மறக்கக்கூடும்.

feb 16

FEB 16th Strike call of SKM and CTU

Farmers Associations have given a call for Gramin bandh- rural strike and Central trade Unions given call for Industrial strike on Feb 16th. They claim 22 political parties have given their support for this strike and bandh call. farmers associations also given a call for Dilli Chalo, facing serious oppression from govt machineries. The Farmers rallying on the borders are facing all oddities and exhibiting their courage and bearing hardships and sufferings. The excess attacks from the Govt side were felt brutal by many personalities. Though SKM Non political brand is there, the political support they receive from the opposition parties and their claim of getting that may be viewed political. But everything is political only in today's India.

Though 3 round negotiations were held by Ministers with Farmers representatives, no fruitfull decisions arrived at yet. 4th round is fixed on coming Sunday the 18th Feb. Hope sense will prevail.

SKM and CTU In their Joint statement dated 17th Jan 2024, the Feb 16th call was reiterated as

"SKM and CTUs/Federations/Associations call for a countrywide massive mobilisation at different levels along with the Industrial/Sectoral Strike and Grameen Bandh on 16th February 2024 against the anti-worker, anti-farmer and anti-national policies of the Central Government."

The main demands are

Legally supported MSP for their produce as per M S swaminathan Recommendation,

MGNREGS with 200 Days work per person per year and Rs.600/- as Daily Wage

Pension Rs 10000,

Withdrawal of Electricity amendment bill 2020,

withdrawal of all complaints launched during their earlier struggle.

Central Unions are demanding

scraping of Labour codes,

restoration of Old pension scheme,

No privatisation of PSU,

Minimum wage Rs 26000,

No contractualisation etc.

In Telecom

BSNLEU demands

Wage Revision

4G and 5 G to BSNL, New Promotion policy

Review of Restrucuring of Manpower

Pension revision and

demands of Contract workers

NFTE 'Call Attention week' from feb 13th- 17th

wage revision

New promotion policy

Revision of sanctioned Strength

Feb 17

What is politics to Gandhi என்பதை கீழ்கண்ட வரிகளில் பியாரிலால் தனது The Last Phase book 2 ல் தந்திருப்பார். தொடர்ந்து ஜூன் 3, 1947 மவுண்ட்பாட்டன் பிரிவினை- விடுதலை அறிவிப்பையடுத்து காந்தியை சந்தித்தவர்களுடன் அவரது உரையாடலையும் தந்திருப்பார். இங்கு சோசலிஸ்ட்கள், இந்து மகாசபாவினர், கம்யூனிஸ்ட்கள் உரையாடலை மட்டும் சுருக்கமாக தர முயன்றுள்ளேன்.

அரசியல் அதாவது காந்தி புரிந்துகொண்ட , அனுசரித்த அரசியல் பற்றி பியாரிலால் எழுதுவது

To Gandhi self, family, his ashram and the wider world of politics represented a unified field…politics had been turned by its high priests into a highly complicated, inaccessible and abstruse subject- almost an esoteric lore which stood above morality and ethics and whose high mysteries only the initiated few could penetrate.

It was a part of Gandhiji's mission to strip it of its mystery and inculcate it as a science of the happiness of the toiling masses, means to realisation of the highest realisable in life. As such it had to be capable of being reduced to commonplace elements of everyday life and to conform to the fundamental truths whose practice sustains society and mankind.

இந்து மகாசபாவினர் காந்தியை சந்தித்து இரு கோரிக்கைகளை வைத்தனர். பிரேயரில் குரான் படிக்கவேண்டாம், காந்தி அரசியலிருந்து ஒதுங்கிக்கொள்ளவேண்டும் என்பன அக்கோரிக்கைகள் . மன்னிக்கவும் ஏற்க முடியாதென்றார் காந்தி.

சோசலிஸ்ட்கள் காங்கிரஸ் மீதான புகார் மூட்டைகளுடன் வந்தனர். காந்தி விடுதலை ஆட்சி மாற்ற வேலைகள் துவங்கியுள்ள நிலையில், தேச கட்டுமானத்தில் ஒவ்வொருவரும் அளப்பரிய சேவை செய்யவேண்டிய கடமையை அவர்களிடம் உணர்த்தினார். காங்கிரஸ் தலைமையுடன் அமர்ந்து பேசி வேறுபாடுகளை மட்டுப்படுத்திக்கொள்ள வேண்டினார். Personalities clash ல் சிக்கிக்கொண்டு கடமைகளை கைவிட்டு விடாதீர் என்றார். மிக முக்கிய செய்தி ஒன்றை அவர்களிடம் காந்தி விடுத்தார். அவ்வரிகள்

Note down these words of an old man- in the times to come people will not judge us by the creed we profess or the label we wear or the slogans we shout but our work, industry, sacrifice, honesty and purity of character. The will want to know what actually done for them.

..if taking advantage of the prevailing misery and discontent of the people, you set about to accentuate and exploit it for party ends it will recoil upon your head and even God will not forgive you for your betrayal of the people

கம்யூனிஸ்ட் தோழர்கள் காந்தியை சந்திக்க வந்தனர். உங்கள் அனைவரையும் என் குழந்தைகளாக பாவித்து என் மனதில் உள்ளதை உங்களுக்கு தருகிறேன் எனக் காந்தி தன் அறிவுரையை தந்தார். முதலில் உங்கள் இசத்தை சற்று தள்ளி வைத்துவிட்டு, எதார்த்த சூழலில் செய்யவேண்டியது என்ன எனப் பார்த்து கடமையை செய்யுங்கள். எந்த அம்சங்களில் உடன்பட்டு வேலை செய்யவியலும் என்பதை கவனித்து அதில் உடன்பட்டு பணி செய்வீர். அதில் தயக்கம் காட்டி அரசியல் ஆதாயம் காணவேண்டி பின் நின்று விடாதீர். மேலும் காந்தி பேசிய வரிகள்

You waste your time and energy in hair splitting, fault finding and picking holes. If you discover any flaw anywhere, you exploit it to make propaganda and spread disaffection against government in power without even caring to make proper enquiry. It seems to have become your stock in trade.

Is there no activity of the government ( Nehru Govt then) which is worthy of cooperation? Think of a moment what you do in Pandit Nehru's place..shoulder the responsibility which Nehru and Patel are shouldering..

You profess lofty ideals but your conduct belies them because you seem to make no distinction between truth and falsehood, justice and injustice. What is pathetic is you regard Russia as your spiritual home. Despising Indian culture, you dream of planting the Russian system. Food however rich, that another person eats, cannot sustain me. I can be sustained only by what I eat. In the same way what an outside power does gives me no satisfaction as it seems to give you.

You claim to be servants of the country. As such , it is up to you to shed narrow party feeling and show a spirit of cooperation with all those who have the good of the country at heart..

காந்தியின் உரையாடல் தொடர்ந்துகொண்டேயிருக்கிறது. செவி மடுப்பவர்களிடம் அவர் வஞ்சனையில்லாமல் உரையாடிக்கொண்டேயிருக்கிறார்.

feb17

புரட்சிக்காரரின் கண்ணியம் குறித்து பகத்சிங் பதிவு ஒன்றை பார்க்க நேர்ந்தது. அவரின் வழிகாட்டி என கருதப்படும் கர்த்தார் சிங் சரபா பற்றிய பதிவது. கர்த்தார் சிங் சரபா ( சரபா அவரது பஞ்சாப் கிராமம்) 1913ல் ஹர்தயாள் போன்றவர்களுடன் கதர் கட்சியை துவங்கியவர். வழக்கம்போல் புரட்சியாளர்களுக்கு நேர்வதுபோல் தேசத்துரோக குற்றச்சாட்டால் கர்த்தார் சிங் நவம்பர் 1915ல் தூக்கிலிடப்பட்டார்.

ஒருமுறை கர்த்தார் சிங் ஆயுதங்கள் வாங்க நிதி தேவை என்ற விவாதத்தில் சக போராளிகளுடன் பங்கேற்றார். நிதி தேவை என்பதற்காக புரட்சிகர நடவடிக்கைகளை தள்ளி போடமுடியாது. கொள்ளை அடித்து நிதி எடுத்துக்கொள்ளமுடியும் என்று அவர் சொல்வதை கேட்டு கூட்டாளிகள் தயங்குகின்றனர். பாய் பரமானந்த் இதற்கு உடன்படுவார் எனச் சொல்லி ஏற்கச் செய்கிறார் கர்த்தார் சிங்.

கிராமம் ஒன்றில் செல்வந்தர் வீட்டில் கொள்ளை என நுழைகின்றனர். பணத்தை எடுத்துக்கொண்டு வரும்போது வீட்டிலிருந்த அழகான பெண்ணிடம் கதர் கூட்டாளி ஒருவர் வம்பு செய்ய துணிகிறார். கர்த்தார் அப்பெண்ணின் கையை அந்த மனிதனிடமிருந்து விடுவித்து, இதற்கு நம் இயக்கத்தில் உடனடி மரணம் தான் தண்டனை- சூழல் சரியல்ல. வெளியேறு. வெளியே போகும் முன்னர் அப்பெண்ணிடம் மன்னிப்புக்கேள்- தாயார் காலில் விழுந்து தவறுக்கு வருந்து என கட்டளையிடுகிறார். அம்மனிதனும் அவ்வாறே செய்கிறார்.

சற்று துணிந்த தாயார் இவ்வளவு கண்ணியமான நீங்கள் இப்படி கொள்ளையில் ஈடுபடுவது அழகா என்கிறார். கர்த்தார் இந்தப் பணம் நாங்கள் சுகபோகமாக வாழ அல்ல. நாட்டின் விடுதலைக்காக பயன்படப்போகிறதென்கிறார். பெண் திருமணத்திற்கான பணம் வைத்திருந்தோம் என தாயார் பெருமூச்சுவிட- கர்த்தார் 'அம்மா எவ்வளவு வேண்டுமோ எடுத்துக்கொள்ளுங்கள்' என அப்படியே வைக்கிறார். அந்தப்பெண்மணியும் வேண்டியதை எடுத்துக்கொண்டு மீதியை நல்ல காரியம் என்கிறீர்கள்- எடுத்து செல்லுங்கள் என்று ஆசி வழங்கினார்.

இந்தப்பதிவில் பகத்சிங் எந்தக்கிராமத்தில் இது நடந்தது- எவர் வீடு- எவ்வளவு பணம் போன்ற விவரங்களை தரவில்லை. கொள்ளையின் நோக்கம் சுயநலமல்ல

என தெளிவுபடுத்துகிறார். பெண்களிடம் கண்ணியமாக புரட்சிக்காரர்கள் நடந்து கொள்ளும் முன்மாதிரியை வைப்பதைக் காண்கிறோம். 19 வயதிலேயே தூக்கை சந்தித்த கர்த்தார் சிங் பகத்தின் பெரும் நாயகன் ஆனதில் வியப்பு ஏதுமில்லை

feb 18

I have given the two views of the experts on MSP- The supported view of Devinder Sharma author and columnist of Farmers rights and the other one is Ashok Gulati, Agri Economist why legal msp is difficult to accept and implement.

Those interested can go through both the views

Devinder Sharma

Farmer Protests: 'MSP needed, that it will cost government Rs 10 lakh crore is misinformation'

Leading food and agricultural policy expert, researcher and writer Devinder Sharma asks why a section of the media and the urban middle class see protesting farmers as the 'other', and why many of us find it difficult to accept that even rural India deserves to be prosperous

Their reasons range from - 'India simply doesn't have enough money', to 'where are the warehouses required to store all that produce?'

There are also those who oppose it on ideological grounds -- 'Why should the farmers be insulated from the vagaries of the market?', 'Linking their income to demand and supply will encourage productivity and innovation' and so on. Minimum support prices and public procurement, they point out, are Soviet-era tools that have been proven to be inefficient and useless.

I am not asking the government to procure everything. That's a kind of an illusion they are creating, to create a fear-psychosis.

We are saying, make MSP a legal instrument. This does not mean that the government will procure everything.

MSP will be a benchmark price below which nobody will purchase, whether it's the agent, private traders or public agencies. So, the government doesn't have to come into play. Only at certain times, government's intervention may be required.

When you announce an economic stimulus to corporates, do you ask these questions? Do you ask where the money has come from? The Rs 15 lakh crore that has been written off by banks as bad loans, is that not a kind of an economic stimulus? But when it's farmers' turn, everybody starts jumping up and down saying where will the money come from…

Everyone else has income security. Look at how you deal with government employees. For them, you have set up a system that lays out the kind of salaries that have to be fixed after a few years gap. We had the 7th Pay Commission, and it cost an additional expenditure of Rs 4.5 lakh crore when it was implemented across the country. No one asked from where the money will come from. It is all assured income and guaranteed pay. But when it comes to farmers, all kinds of questions are used. You want to

leave them at the mercy of the market, demand and supply. Markets have failed to provide an assured income anywhere in the world.

How long do you want farmers to continue suffering, dying and committing suicide? Is 75 years not enough? Since the National Crime Records Bureau started compiling the data on farmer suicides, nearly 4-lakh farmers have committed suicide, and you are still singing the praise of the markets? Markets have failed everywhere in the world, why do you think such a failed model should be brought into India...Are we worried that if the farmers get higher income, corporate profits would be reduced?

Give them a guaranteed minimum price. Whatever income they generate, they are going to spend it. It will in turn generate huge demand in the economy. The wheels of the development will run faster. If you give farmers a legal MSP, the economic growth will jump to the double digits immediately.

Ashok Gulati Agri Economist views

In Short

- Professor Ashok Gulati warns of fiscal disaster from legal MSP.
- Gulati criticises government's approach favouring consumers
- He proposes fine-tuning price stabilisation scheme instead of legal MSP

Renowned agricultural economist Professor Ashok Gulati expressed his concerns over the potential fiscal disaster that could arise from legally guaranteeing a Minimum Support Price (MSP) for farmers in India.

In an exclusive interview with India Today TV, Professor Gulati said that such a move could not only be financially unviable but also detrimental to farmers themselves.

"You know normally the prices are decided by demand and supply and if the MSP is made legal, the production assume of a particular commodity is 100, but the demand is 70. Then what will happen? Nobody will touch the remaining 30. It will stay with the farmers," he said.

He emphasised the basic economic principle of demand and supply, suggesting that legal MSPs would disrupt this balance, leading to surplus commodities that traders would avoid purchasing for fear of legal repercussions.

"Demanding legal (guarantee for MSP) and implementing that all over the country for 23 commodities, to me it's impossible," he added.

Highlighting the limited scope of MSP, Gulati pointed out that only 28 per cent of agricultural produce is covered by the existing MSP system, with significant growth in sectors like poultry, dairy, and horticulture occurring without any price guarantees.

"Within MSP on 23 crops, real implementation of MSP is only in wheat and rice primarily and that too in 5-6 states. You go to Bihar, for the last 50 years, their prices of paddy are 15 to 25 per cent lower than MSP. So why don't you go and procure there?" he asked

Addressing the risks faced by farmers due to nature and market fluctuations, Gulati acknowledged the importance of crop insurance and other market mechanisms to mitigate these risks.

He criticised the government's approach to market intervention, which often favours consumers over producers, leading to further imbalances.

As a solution, Gulati proposed fine-tuning a price stabilisation scheme with a substantial fund to support farmers when market prices fall excessively below MSP. He cautioned against making MSP legal, as it would deter traders from engaging with the market, ultimately harming farmers'

feb 19

கோரிக்கை என வந்துவிட்டால் அதற்கான இரு பக்கங்கள், அவற்றிற்குரிய நியாயப்பாடுகள் என வந்துவிடுகின்றன.

கோரிக்கை உருவாக்கம் என்பதற்கான உள் போராட்டங்களும் சில நேரம் பெரும் விவாதச் செலவை வைத்துவிடும். அப்படி விவாதித்து தேறும் கோரிக்கைகளின் புரட்சிகர தன்மை , உருவாக்கப்போகும் மாற்றங்கள் அல்லது எதிர் விளைவுகள் பற்றியும் கூட கருத்து வேறுபாடுகள் உருவாகலாம். அதனால் அமைப்பு கட்சி பிரிந்து போதல் கூட நேர்தலும் உண்டு.

கோரிக்கையை ஏற்று அமுல்படுத்த வேண்டியவர் நிலையும் அதிகாரம் சார்ந்த மனநிலையுடன் தொழிற்படும். முதலில் நியாயமில்லை என்ற எண்ணம்தான் இருக்கும். அமைதியை குலைக்கிறார்கள் என்ற எண்ணமும் வரலாம். அரசியல் என்ற எண்ணமும் தோன்றும். நிதி சார்ந்து இருந்தால் கேட்கவே வேண்டாம்- சாத்தியமே இல்லை என்ற கணக்குகள் எப்போதும் மேஜை இழுப்பறையில் கோப்புகளாக உட்கார்ந்திருக்கும். என்னை எதிர்த்தே போராட்டமா என்கிற ஆணவம் அடக்குமுறையை ஏவ வைக்கும்.

கோரிக்கை வைப்பவர்களும் தாங்கள் கேட்பதென்ன, அதன் சாத்தியப்பாடுகளை தாங்களே ஆட்சிக்கு நிர்வாகத்திற்கு வந்தால் தீர்க்கப்படக்கூடியது தானா என்ற அடிப்படை ஆய்வில்லாமல் கூட வைக்கவும் நேரலாம். அவனுக்கு தந்தாயே எனக்கு ஏன் கூடாது என்கிற ஒப்பீட்டு தன்மையில் கோரிக்கை நியாயத்தை பெரும் விற்பன்னர்கள் கூட கீழிறங்கி எழுப்புவதுண்டு. அந்த அவன் குறித்து எந்தப் புரிதலும் இல்லாமல் இருக்கவேண்டும்- இல்லையெனில் bias இருக்கவேண்டும். பல நேரங்களில் இந்த emulation என்பதே கூட பெரும் அரசியலாக தொழிற்படும்.

ஒருமுறை நாடாளுமன்ற விவாதத்தில் 'உடனடியாக அனைவருக்கும் வீடு ' என்ற கோரிக்கை விவாதம் எழுந்தபோது, லோகியா அவர்கள் எவ்வளவு இரும்பு , சிமெண்ட், கற்கள் வேண்டும் என உங்களுக்கு idea இருக்கிறதா- அந்த அளவு இந்தியா உற்பத்திக்கு போய்விட்டதா அல்லது அந்த அளவு உடனே இறக்குமதி செய்யும் பொருளாதார வசதியில் நாடு இருக்கிறதா எனக்கேட்டதுடன்,

உடனடியாக என்பதையும் பொத்தாம் பொதுவாக அனைவருக்கும் என கோரிக்கை எழுப்புவதால் தீர்க்க முடியாமல் போகலாம் என்ற அறிவுரையும் வைத்தார்.

டெலிகாம் தொழிற்சங்கத்திலும் bonus for all CG Employees என விவாதம் வந்தபோது , தோழர் குப்தா மிக எதார்த்தமாக if bonus for all means bonus for none என்ற அறிவுரையை தந்து , கோரிக்கை specification குறித்த புரிதலை உருவாக்கி இரயில்வேக்கு அடுத்து தபால் தந்தியில் PLB என்கிற புதியவகைப்படி அக்கோரிக்கைக்கு தீர்வு கண்டார். கோரிக்கைகள் எவ்வளவு உயரமோ அந்த அளவிற்கு முற்போக்கானவர் புரட்சிக்காரர் என்கிற புரிதல் பழுதாகிப் போகும்.

போராட்டம் என்பது கூட ஓர் அமைப்பு அல்லது அதன் தலைவர் எவ்வளவு பெரிய போராளி தெரியுமா - அனைத்து தியாகமும் உயிர்பலியும் செய்யத்தயார் என்கிற 'மிலிட்டன்சி' க்கான வெளிப்பாடாக மட்டும் இருந்துவிடக்கூடாது. திரளாக இருக்கும்போது அம்மட்டில் அச்சம் இல்லாமல் போகலாம். போராட்டத்திற்கு அழைத்து வந்திருப்பவர் ஒவ்வொருவர் தொடர் வாழ்வும் மிக முக்கியமானது - அரசாங்க நிர்வாக போலீஸ் மற்றும் இராணுவ எந்திரம் என்கிற vulturesக்கு அவர்களை இரையாக்கவிடக்கூடாது என்கிற பொறுப்புணர்வும் அமைப்பின் தலைமைக்கு தேவைப்படுகிறது.

Spontaneous பொங்குதல்களை channelise செய்கிற கலையில்லாவிடில் , போராட்டம் வெறும் கலவரம் என்ற அளவில் தீர்வின்றி தீர்ந்துபோகும். போராட்டங்கள் கருத்தொற்றுமையில் சாத்தியமான அளவு கோரிக்கை தீர்வு என்பதை தாண்டி அதற்கு வேறு முகாந்திரங்கள் முகங்கள் இல்லாமல் இருப்பது நலம் பயக்கும்.

அரசின் அடக்குமுறைகள் அதிகரிக்கும் போது அதை அதே வகைப்பட்டு எதிர் வழியில் சந்திப்பது என்பதைவிட, கோரிக்கைகளின் தீவிர நியாயத்தை உணர்ந்த மதிப்பு மிகு தலைவர்கள் தாங்கள் உணரும் மாற்று அகிம்சா போராட்டங்களை- நன்கு அறியப்பட்ட உண்ணா நோன்பு பட்டினி வழி போன்ற ஒன்றை தேர்ந்தெடுக்கலாம்.

போராட்ட முறைகள், கள உரைகள், கோரிக்கைகள் என எதிலும் நிதானமிழக்காமல் , வாய்ச் சவாடால் gas விடாமல் , தங்கள் லிமிடேஷன் பற்றிய

உணர்வின்றி , கூட்டத்தைப் பார்த்து வானில் பறக்காமல் பூமியில் கால் ஊன்றி , அடக்கமாக தீர்க்க வேண்டுமே என்கிற பொறுப்புடன் தலைமை பாத்திரம் கொள்வோர் செயல்பட வேண்டியிருக்கும்.

போராட்டமே வெற்றி என புரிந்துகொண்டுவிட்டால், தீர்க்க வேண்டிய பொறுப்பு ஏதும் இருக்க வேண்டியதில்லை. அறைகூவல் விட்டாகிவிட்டது, தட்டி எழுப்பி விட்டோம், protest செய்தாலே போதும், பங்கேற்றவர் எவ்வளவு எங்கு பலம் பலவீனம் என்ற நேர்மையான கணக்கு பார்க்க வேண்டியதில்லை- அப்படிப் பார்த்தாலும் அது இரகசியம் - பலவீனத்தை காட்டிவிடக்கூடாது அப்படியே எல்லாம் அற்புதமாக வீச்சாக என்று maintain செய்வதே நலம் என்பது ஏமாற்றிக்கொள்தலாக ஏமாற்றுதலாக முடியலாம். எவரும் எவருக்கும் accountability ஆக இல்லாத நிலையை வளர்ப்பதாக முடியலாம்.

போராட்டத்திற்கு ஆகும் நிதிச்செலவும் பிற சக்தி செலவும் கூட முக்கியமானதே. Best results with least expenditure of energy என்கிற அறிவுரையை வைத்துக்கொள்வதும் நலம் பயக்கும். டெலிகாமில் தோழர் குப்தா வேறு ஒன்றையும் சொல்லிக் கொடுத்தார். Never bang the doors of negotiations. பேச்சுவார்த்தை என்பதைப் பற்றியே சிந்தனையில்லாமல் போராட்டம் , touch and go soap bubble struggle என்பது ஆரோக்கியமான ஒன்றா எனத் தெரியவில்லை.

அரசாங்கம் நிர்வாகம் அலட்சியமாக இருந்தாலும் பேச்சுவார்த்தை மேசைக்கு கொணரவேண்டிய அனைத்து முயற்சிகளையும் போராட்டத் தரப்பினர் செய்தல் நலம். பேச்சுவார்த்தையின் தன்மையை முடிந்த அளவு தீர்வின் சாலைக்கு இரு பக்கமும் அழைத்து செல்லும் பக்குவ மனநிலையாளர்கள் இருப்பது நலம். வாக் அவுட் மனநிலையில் செல்வது உசிதமானதாக இருக்காது.

போராட்டத்திற்கு ஆதரவாக solidarity காட்டுபவர்களுக்கும் கூட பொறுப்பு தேவைப்படுகிறது. அதீத அரசின் அடக்குமுறைகளை கண்டித்தல் அவசியமான நிலைப்பாடாக பொதுவாக இருந்துவிடும். அதீத கோரிக்கைகள் என்ற புரிதல் பொதுவாக இருக்காது. அதற்கு பல்வேறு எதார்த்தங்களையும் fact sheet study யும் தேவைப்படும். உதாரணமாக குறைந்த பட்ச ஊதியம் என்கிற கோரிக்கை போராட்டம் தோறும் மாறிக்கொண்டே உயர்ந்து கொண்டேயிருக்கும்- முன்வைத்த எதையும் அடையாமலேயே.

போராட்டங்களில் common sense மிக அவசியம் என தோழர் குப்தா சொல்லிக்கொண்டேயிருந்தார். மத்திய அரசு தன் ஊழியர்களுக்கு கொடுக்க கூடிய குறைந்த பட்ச ஊதியம் என்பதில் துவங்கி இக்கால போராட்டங்களில் கோரிக்கை அளவு உயர்ந்துகொண்டே போனதே தவிர தீர்வு வராமல் நிற்கிறது.

எந்த போராட்டமும் வீணாவதில்லை - வீழ்வதில்லை விதைக்கப்படுகிறோம் என ஆறுதல் அடையலாம். எவ்வளவு போராட்டங்கள் எந்த அளவு தீவிரமாக நடந்தது என்பதை விட, எவ்வளவு விரைவில் தீர்த்தோம் எந்த அளவு தீர்த்தோம் என்கிற பாதையை தோழர் குப்தா சமைத்துக் காட்டினார். ராணா பிரதாப் பாதையல்ல மராத்திய சிவாஜி tactics என்பார் தோழர் குப்தா.

Struggle struggle struggle even if no negotiation that is the militancy என்ற முழக்கத்தைவிட Negotiate negotiate if negotiations fail then hit hit hard- wait halt consolidate the gains and then hit என்பதில் அவர் நம்பிக்கை வைத்தவராக இருந்தார். Massesயை மட்டும் இறக்கிவிடாமல் அவர் தன்னை வருத்திக்கொள்ளும் பட்டினிப்போரில் இறங்குவார். போராளிகளுக்கு வரும் தண்டனைகளை முடிந்தவரை குறைக்கப்பார்ப்பார். தன் உடலின் சக்தியை செலவழிக்க தயங்காமல் இருந்த தலைமை மரபை அவர் தந்தார். தான் எடுத்து வைத்த கோரிக்கைகளின் தீர்விற்கு அரசாங்கத்தை மட்டும் கைகாட்டாமல், பெரும் பொறுப்பை accountability ஏற்ற தலைமை மரபை அவர் leadership heritage ஆக விட்டுச் சென்றுள்ளார். போராட்டத்தை துவங்குவதல்ல அதை சேதாரமில்லாமல் அல்லது தவிர்க்கமுடியாமல் போனால் மிகக் குறைந்த சேதார செலவில், முடிந்த அளவிலான தீர்வுடன் போராட்டத்தை முடிக்கும் பெரும் பாரம்பரியத்தை அவர் நிகழ்த்திக் காட்டினார்.

Militancy does not mean rudeness என தோழர் டாங்கே சொல்லிக்கொடுத்தார். Hold the bull by horns என்பதை மாட்டின் முன் நின்று அதை வசைபாடிக்கொண்டிருப்பது என காந்தியும் சொல்லவில்லை. அதை எடுத்தாண்ட தோழர்கள் டாங்கே குப்தா போன்றவர்களும் சொல்லவில்லை. கோரிக்கையை வெறும் வசவுகளால் தீர்க்கமுடியுமா எனத் தெரியவில்லை…

19-2-2024

feb 20

Man is a fallible being. He can never be sure of his steps...Mine is a struggling, striving, erring, imperfect soul. But I can rise only by experimenting upon myself and others.

What though we have many bodies? We have but one soul..I cannot therefore detach myself from the wickedest soul nor I may I be denied identity with the most virtuous..I must involve in my experiment the whole of my kind..Life is but an endless series of experiments.

M K Gandhi sep 18, 1924 when commencing his 21 days fast from the residence of Mahomed Ali , Delhi

feb 20

இந்திராவிற்கு நேரு தன் சிறைவாழ்வில் எழுதிய உலக வரலாறு குறித்த கடிதங்களின் தொகுப்பு Glimpses of World History வந்து 90 ஆண்டுகள் ஆகிவிட்டது. இந்திரா ஆட்சிக்காலத்தில் 1982ல் மீள் பதிப்பும், சோனியா முன்னுரையுடன் 20 ஆண்டுகளுக்கு முன்னர் ஒரே தொகுதியாக 1100 பக்கங்களில் நேருவின் அப்புத்தகம் வந்துள்ளது.

பெங்குவின் ரூ 900க்கு இப்பெரும் புத்தகத்தை அப்போது போட்டிருந்தனர். இப்போது கூட கிடைக்கலாம். விடுதலைக்கு முன்னரான நேருவின் மூன்று மிக முக்கிய புத்தகங்களில் Glimpses of world History ம் ஒன்று. மற்ற இரண்டு Autobiography, Discovery of India.

நேருவின் historiography வரலாற்றைப் புரிதலும் அதை முன்வைத்தலும் விரிவான வாசிப்பிற்குரிய ஒன்றாகவே எனக்குப்படுகிறது. அவர் நடந்த வரலாற்று நிகழ்வுகளை வெறும் மோதல் பாதைக்கான நிகழ் களமாக மாற்றிவிடாமல், பொருத்தமான இணைக்கத்தேர்வுகளை, composite culture காரணிகளை தேட முயற்சிப்பவராக இருப்பதைக் காணமுடியும்.

இந்திய பண்டைய வரலாறாக இருந்தாலும், உலக நாடுகளின் வரலாறுகளாக இருந்தாலும் எதுவும் still civilisation or stagnated ஒன்றாக இருக்கவில்லை என்ற புரிதலை அவர் மனம் கொள்கிறார். மானுட வரலாற்றின் நீள் திசையின் ஆயிரக்கணக்கான ஆண்டுகளை நொடிதோறும் எவரும் உள்ளது உள்ளபடி எழுதி வைத்திருக்கவும் முடியாது. பேசி சென்றிருக்கவும் முடியாது. கிடைத்தவற்றை ஏ எல் பாசம் சொல்வது போல controlled imagination யைத் தூவித்தான் வரலாறு அதை பிரதியாக்குபவர்களால் நமக்கு கைமாற்றித் தரப்படுகிறது.

முழுமையான இருட்டில் துழாவுதற்குப் பதில் ஆங்காங்கே கிடைக்கும் சிறு கைவிளக்குகளாக இந்த history யை narrativeயை எடுத்துக்கொள்வது நலம். அதை முடிந்தவரை பகுத்தறிவின் எல்லைக்குள் வைத்திருப்பதும் நலம். அதை வழிபாட்டு நம்பிக்கை பல்லக்கில் வைத்து திருப்பணிகள் நடத்துவதும், அதையே நம்பி பழிதீர்த்துக்கொள்ளும் கள விளையாட்டுக்களை நடத்துவதும் வரலாற்றை துப்பாக்கியாக்கும் முயற்சியாகிவிடும்.

வரலாற்றை எழுதும்போது விடுபடல்கள் எவருக்கும் நேரலாம். அது conscious or unconscious attempt ஆக இருந்திருக்கலாம். அதை நேர்செய்தல் வேறுவகைப்பட்ட வரலாற்றாய்வாளர்க்கு அவசியமாகலாம். விடுபடல்களைச் சொல்வது, சொன்னதில் தரவுகளின்படி தவறு இருந்தால் அதைச் சுட்டி சரிசெய்வது , ஹிஸ்டோரியாகிராபி குறித்த ஆரோக்கியமான முறையாகலாம். தேவைப்படும் அரசியலுக்கேற்ப வரலாற்றை தைப்பது என்பது அரசியலுக்கும் வரலாற்றிற்குமே ஆபத்தாகலாம்.

நேரு சிறையில் தனக்கு கிடைத்த எச் ஜி வெல்ஸ் உள்ளிட்டவர் எழுத்துக்களைக்கொண்டு , கடித வழி இலக்கியமாக உலக வரலாற்றை இந்திரா எனும் மகள் மாணவிக்கு சொல்ல முயன்றுள்ளார். 196 கடிதங்கள்..சில இடங்களில் மட்டுமே அன்பை வெளிப்படுத்தும் personal touch மிகக் குறைந்த வரிகளாக ஏக்கத்துடன் வெளிப்படுத்தப்பட்டிருக்கும். எடுத்துக்கொண்ட task ல் கவனமாக நேரு travel செய்திருப்பார். அய்ரோப்பா, ஆசியா நாடுகளின் முன்னோடி நாகரிகப் பகுதிகள் குறித்து - கிரீஸ் ரோம் இங்கிலாந்து பிரான்ஸ் ஜெர்மனி, இந்தியா சீனா ஜப்பான் அராபியா, பின்னர் வந்த அமெரிக்கா குறித்து ஏராள செய்திகளை அவற்றின் வரலாற்று போக்கில் நேரு தந்திருப்பார்.

வரலாறு என்கிறபோது சுவாரஸ்யமான, சற்று தொய்வு ஏற்படுத்தும் எழுத்துக்கள் கலந்தே இருக்கும். நேருவின் இந்த புத்தகமும் அதற்கு விதிவிலக்கு என சொல்லமுடியாது. முதல் 600 பக்கங்களுக்கு மேல் அவர் நன்கறிந்த உணர்ந்த 19- 20 ஆம் நூற்றாண்டின் வரலாற்று கதைகள் பின்னப்பட்டிருக்கும்.

வரலாற்றில் ஆர்வம் இருந்தவர், நேரு அபிமானிகள் என பலரும், நேரு வெறுப்பாளர்களில் சிலரும் இந்நூலை படித்திருப்பர். இக்கால இளைஞர்களுக்கும் சற்று எளிய வகையில் ஒரே நூலில் உலக வரலாற்றின் சில வெளிச்சப்புள்ளிகளை அல்லது தொடுகோடுகளை இந்நூல் 20 ஆம் நூற்றாண்டின் துவக்க ஆண்டுகள்வரை காட்டும்.

வாய்ப்புள்ளவர் சற்று மல்லுக்கட்டினால் இந்நூலை வாசிக்க இயலும் என்று நம்புகிறேன். 20-2-2024

feb 23

Caste Its Twentieth Century Avatar வெளிவந்து 18 ஆண்டுகள் ஆகிவிட்டது. புகழ்வாய்ந்த எம் என் ஶ்ரீனிவாஸ் பலரின் கட்டுரைகளை தொகுத்து எடிட் செய்துள்ள பெங்குவின் வெளியீடு. 2016 அக்டோபரில் ஶ்ரீனிவாஸ் அறிமுகத்தையும், தமிழ்நாட்டில் பிற்பட்டோர் இயக்கம் என்கிற கட்டுரையையும் படித்து இப்புத்தகத்தை விட்டிருக்கிறேன்.

கண்ணில் பட்டதும் மீண்டும் முழு நூலையும் படிக்கவேண்டும் என்கிற நினைப்பு..காரியமாகவேண்டும். அறிமுகம் தவிர நூலில் 13 ஆய்வாளர்களின் கட்டுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஶ்ரீனிவாஸ் சாதி குறித்து ஆண்களே எழுதிக்கொண்டிருக்கிற குறையைப் போக்க ஐராவதி கார்வே, பவுலின் கொலந்தா, பேரா லீலா போன்றவர்கள் எழுதவந்ததைச் சொல்லி ஆறுதல் அடைவார். இந்த நூலின் முதல் கட்டுரையாக பேரா லீலா ட்யூப் அவர்களின் சாதியும் பெண்களும் கட்டுரையை வைத்திருப்பார் ஶ்ரீனிவாஸ்.

லீலாவின் இந்த வரிகளை ஶ்ரீனிவாசும் மேற்கோள் காட்டியிருப்பார்

Caste is not dead. Gender is a live issue. The principles of caste inform the nature of sexual asymmetry Hindu society, and hierarchical of caste are articulated by gender.

Gender caste linkage குறித்து லீனா விரிவாக பேசியிருப்பார். லீனா சாதித்தன்மையின் மூன்று அடிப்படைக் கூறுகளாக பிறப்பு வழி தனித்தன்மை, மேல் கீழ் செங்குத்து ஸ்டேடஸ், ஒருவரை ஒருவர் சார்ந்த தொழில் பிரிவினை என்பதை முன்வைப்பார். இந்த தன்மைகள் தனிமனிதர் வழியாக அல்லாமல் units based on kinship வழி இயங்கு தன்மை கொண்டவை எனவும் வரையறுப்பார். Familial units kinship units .

குடும்ப பழக்கம் என்கிற கலாச்சார நடைமுறைகள் சடங்கு சம்பிரதாயங்கள் , உணவு பழக்கங்கள் - tastes ஒவ்வொருவருக்கும் கடத்தப்படுகின்றன. இங்கு பெண்களுக்கான பாத்திரம் பங்களிப்பு பற்றி லீனா ஆய்வு செல்கிறது. லீனா எழுதுகிறார்

The place of women as active agents and instructions in the arena of food and rituals also implies that women who command its repertoire of rules gain special respect and gives them a certain self identity and self esteem. For most women these practices are an important avenue of self expression and social recognition. They also act as a medium which helps women exercise power over the women and men within the family..

The processes within which women carve out a living space also reinforce caste and its boundaries.

ஒவ்வொரு குடும்ப நிகழ்ச்சியிலும் நடக்கும் விஷயத்தையே இங்கு லீனா காட்டி அதற்கு theoretical value வை சேர்க்கிறார்.

Marriage and sexual relations constitute a central arena in which caste impinges on women's lives. பிறப்பு வழி சாதி என்பதில் ஆண் தன்மை என்கிற அம்சம் மேலோங்கி இருந்தாலும் தாயின் சாதி என்பது புறந்தள்ள முடியா பேச்சுப்பொருளாகவும் தொழிற்படுகிறது. லீனா இதை caste in fact functions as a principle of bilateral affiliation என எழுதுவார்.

சாதி எல்லை காப்பு boundary maintenance என்கிற ritual purity சடங்காசார தூய்மை- எங்கள் பழக்க வழக்கம் என்கிற விட்டுக்கொடுக்காமை நீடிப்பதைக் காண்கிறோம். இது அம்பேத்கர் பேசிய பிராம்மணர்களிடமிருந்து சாதி படிநிலைகள் பார்த்து ஒழுகுதல் முறையால் வந்திருந்தாலும், அனைத்து சாதிப் பிரிவினர் குடும்ப குல வழக்க சடங்கு ஆசாரங்களாக தொடர்வதைக் காண்கிறோம்.

திருமணம் என்பதுடன் எதுவும் முடிவதில்லை. அங்கு துவக்கி வைக்கப்படுகிறது என்றே தோன்றுகிறது. Women need to be and their sexuality contained at all times thro social control, idealisation of women's role and thro emphasis on female modesty. The importance of the purity of caste affects a woman in all life stages என்பதை பார்க்கச் சொல்கிறார் லீனா.

பெண் தூய்மை என்பதில் எல்லா சாதி எல்லைகளும் காப்பிட்டுக்கொண்டிருக்கின்றன என்பதை லீனா ஆய்வு புலப்படுத்தும். Restrained and controlled sexuality is a prerequisite for socially sanctioned motherhood என்கிற மிக முக்கிய புள்ளியை தொட்டுக்காட்டுகிறார் லீனா. அப்படி அப்பெண் அந்த சாதி குடும்பத்தில் நுழைந்து முழு உறுப்பினர் ஆக்கப்படும் ஏற்கப்படும் தொடர் நிகழ்வுகள் காலந்தோறும் அரங்கேற்றப்பட்டுக்கொண்டேயிருக்கிறது.

இந்நூலில் பல ஆய்வுத்தாள்கள் இடம் பெற்றுள்ளன. விருப்பமுள்ளவர் விருப்பமான ஆய்வைத்தாளைக்கூட தனியாக வாசிக்க முடியும்.

The political Economy of caste

Caste and Hinduism

Caste in rural India

BC movement in TN

BC and social change in UP and Bihar

Buddhism a case study of village Mahars

The judicial view of OBC

Job reservation and efficiency

Mandal

Muslims social stratification

Caste amongst Christians

நூலின் கட்டுரைகள் தலைப்பை பார்க்கையில் தன்னளவில் முழுமையாக சாதி குறித்து சித்திரம் ஒன்றை - அதன் இருப்பை அதே நேரத்தில் அது பெற்று வரும் mobility குறித்தும் இந்நூல் பேசுவதாக சொல்லலாம். எவரும் சாதி குறித்த முழுமையை தந்துவிடமுடியாது. ஆங்காங்கே கிடைக்கும் perceptions உரிமைகோரல்களை மேலேறுதல் என்கிற தவிப்பின் போராட்டங்களை உணர்த்துதல் என்கிற அளவில் அவற்றை நாம் புரிந்துகொள்ளமுடியும்.

சாதியும் தன்னளவில் அப்படியே தேங்கி நின்றுவிடவில்லை. ஆங்காங்கே சலனங்கள் அசைவுகள் தென்படாமல் இல்லை. தன் இறுக்கத்தை பொதுவெளிகளில் குறைத்துக்கொண்டும், உள்ளிடங்களில் அதன் இருப்பை வைத்துக்கொண்டும் சாதி சமூகம் சடங்குகளின் வழி வாழ்ந்துகொண்டு இருக்கிறது. பொது வெளி மதிப்புகள் கூடி , உள்ளிட ஆசாரங்கள் மதிப்பிழத்தல் என்கிற காலவெளியில் அதன் வீச்சு இற்றுப்போகலாம். குடும்ப உடைவுகள் சமூக மீறல்கள் என்கிற போராட்டங்கள் வலுப்பெறும்போது

மீத மிச்ச எச்ச சாயல்கள் என அது ஓயலாம். அடையாளப் போராட்டங்கள் எவ்வழியில் சமூகத்தை அழைத்துப் போகுமோ ..ஊகிக்கமுடியவில்லை.

Feb 24

M K Gandhi wrote so in 1909

The Prime Minister is more concerned about his power than about the welfare of parliament. His energy is concentrated upon securing the success of his party. His care is not always that parliament shall do right. Prime Ministers are known to have made Parliament do things merely for party advantage. All this is worth thinking over.

I can have nothing against Prime Ministers, but what I have seen leads me to think that they cannot be considered really patriotic. If they are to be considered honest because they do not take what are generally known as bribes, let them be so considered, but they are open to subtler influences. In order to gain their ends, they certainly bribe people with honours. I do not hesitate to say that they have neither real honesty nor a living conscience

Hind Swaraj page 26 centenary Edition Rajpal sons Delhi

Feb 24

inputs from

South VS North Book by RS Nilakantan

Agriculture contributes only 3.91 % to TN's GSDP. That is the lowest proportion in the country among the large states. Kerala at 4.07 %. Telangana, Maharashtra and Karnataka are 5 %, 5%, 5% and Andhra is having 11 % of its GSDP. Punjab 13 %, UP 13 %, WB 12 %, Rajasthan 12 %, Gujarat 6 %, Haryana 8 % and MP 21 %

Punjab is a relatively prosperous state with reasonable levels of Human dev that still has a high degree of Independence on farming as an economic activity - also highest yields per hectare.

Rice yield in KGs per hectare

MP 2026 Kg, TN 3923, Punjab 4366, Bihar 2409, Haryana 3181, orissa 1765, AP 2792

The Global average is 4300 Kg. Only Punjab matches that.

In the case Wheat Yield

Punjab 5090, MP 2993, Haryana 4412, UP3269, Bihar 2816, Gujarat 2932.

Punjab yield is higher comparing global average 4400 kg.

Sugarcane Yield

UP 79255 Kg, maharashtra 92166, TN 92002, Gujarat- 66220, Punjab 83583, Haryana 84500, Ap 80283

Agri Rural Housholds %

AP 42 %, Bihar 51, Haryana 61, Gujarat 67, Karanataka 55, Kerala 27, MP 71, Maharashtra 57, Punjab 51, rajasthan 78, TN 35, UP 75 and WB 45 %

The States where dependence on Agri is low are also states that arae urbanised the most. Those that do depend are agriculture are urbanised least.

Urban Pop % as per 2011 census

AP 33%, Bihar 11, Gujarat 43, haryana 35, Karnataka 39, Kerala 48, MP 28, Maharashtra 45, punjab 37, TN 48, UP 22, WB 32

Average daily wage for Non Agri Labourers Rural in Rupees

AP 291, Bihar 267, Gujarat 234, Haryana 376, Karnataka 264, Kerala 670, MP 206, maharashtra 240, Orissa 241, Punjab 332, Rajasthan 313, TN 448, UP 272, WB 291.

Except TN and Kerala all are low wage states.

For Agri Labourers

AP 301, Bihar 257, Gujarat 208, Haryana 392, Karnataka 292, Kerala 701, MP 198, maharashtra 231, Orissa 232, Punjab 349, Rajasthan 298, TH 410, UP 258, WB 267

Except Kerala no one is touching the wage equivalent CG Minimum wage .kerala is giving higher than that. Even TN is giving 12000/ month only.

feb 25

செயலறம்- காந்தி குறித்த நேர்காணல் தொகுப்பு -திருமதி சித்ரா பாலசுப்ரமணியன்

- எஸ். ஹேமலதா

திருமதி சித்ரா அவர்கள் பொதிகை தொலைக்காட்சிக்காக பதினாறு ஆளுமைகளை நேர்காணல் செய்தவற்றை தன்னறம் பதிப்பகம் தொகுப்பாகத் தந்திருக்கிறது. தொலைக்காட்சி நேரலையை பார்க்கத் தவறியவர்களுக்கும் புத்தகமாகப் படிப்பதில் விருப்பம் உள்ளவர்களுக்கும் அருமையான தொகுப்பு . இந்த நேர்காணலில் பங்கு பெற்றிருக்கும் ஆளுமைகள் தங்கள் வாழ்வில் எந்தப் புள்ளியில் காந்திய தரிசனத்தைப் பெற்றார்கள்- காந்தியத் தாக்கம் அவர்களிடம் உணரப்பட்டது எப்போது என்பதில் தொடங்கிபல்வேறு கேள்விகளுக்கு விடையளித்திருக்கிறார்கள்.

தேசிய அருங்காட்சியக இயக்குனர் திரு அண்ணாமலை அவர்கள் நேர்காணலில் இரண்டு விஷயங்கள் நம்மை ஈர்க்கும். "காந்தி காலடியத் தேடி" நிகழ்சிக்காகதயாரித்த ஆவணப்படத்தை காந்தி கல்வி நிலையத்தில் இணைய பதிவேற்றம் செய்திருக்கிறார்கள். அது எல்லோரும் பார்க்க வேண்டிய ஒன்றாக இருக்கும். ஏனென்றால் காந்தி சென்ற இடங்களுக்கு மறு வருகை செய்திருக்கிறார்கள். அதே போலகாந்தி மியூசியத்தில் நடந்த அஹிம்சை சந்தை பற்றிய குறிப்பு வருகிறது. காந்தி விரும்பிய 'production by masses' concept ஐ கொண்டிருக்கும். கோடம்பாக்கத்தில் நடைபெற்ற தொழிற்பயிற்சிப்பள்ளி என ஏராள விஷயங்களை பகிர்ந்திருக்கிறார்.

ஒவ்வொருவருடனான நேர்காணலில் காணும் வாசகருக்குப் பழக்கமான மொழிநடை வாசிப்பில் லகுவை தருகிறது. காந்தி நேருவை பற்றிய மிக நல்ல புத்தகங்களை திரு அரவிந்தன் கண்ணையன் அறிமுகம் செய்கிறார். தொழிலாளர்களுக்காகப் போராடிய காந்தி பற்றிய விவரங்களை தனது நேர்காணலில் தொட்டுச் செல்கிறார். பெரும் உடையாடல்களை நடத்தியவராக அவரை சிலாகிக்கிறார்.

சம்பரான் போராட்டம், அகமதாபாத் ஆலை தொழிலாளர் போராட்டம், உப்பு சத்தியாக்கிரகம் போன்றவற்றின் விவரங்களை திரு ஆசை குறிப்பிடுகிறார். காந்தி என்ற ஒரு சொல் மக்களின் மந்திரச்சொல்லானது என்கிறார்.

காந்தியை உலகின் பல தலைவர்களோடு ஒப்பீடு செய்கிறார் திரு பி.ஏ.கிருஷ்ணன். காந்தீய நிர்மாணத் திட்டங்கள் பற்றிய விளக்கம் குறிப்பிடத் தக்கது. அதுபோல காந்தி சோதித்துப் பார்த்த மருத்துவ முறைகளையும் அவற்றில் தனக்கு உவப்பில்லை என்பதையும் நேர்மையாக பதிவு செய்துள்ளார். மனித குலம் உள்ளவரை காந்தி நினைக்கப்படுவார் என அழுத்தமாக கூறுகிறார்.

காந்தியால் ஈர்க்கப்பட்ட போராளி திருமதி கிருஷ்ணம்மாள் ஜகன்னாதன். காந்தீய வழியில் அவர் நடத்திய போராட்டங்களை விவரிக்கிறார். அப் போராட்டங்களில் ஈடுபட்ட போது தனது பிள்ளைகளை விட்டு பிரிந்திருந்ததையும் , காந்தீயத் தத்துவத்தால் அக் கடினமானதருணங்களை எதிர் கொண்டதையும் சொல்கிறார்.

முடிவுகள் எடுப்பதில் வல்லவரான காந்தி, ஒரு பத்திரிக்கையாளராக உச்ச பட்ச ஜனநாயகத்தை கடைபிடித்ததை வியந்து கூறுகிறார் பத்திரிக்கையாளர் சமஸ்.

அம்பேத்காரியவாதியாக தன்னை முன்நிறுத்திக் கொள்ளும் திரு. தொல். திருமாவளவன், காந்தி அகந்தை இல்லாத ஒரு தலைவராக , பிறரது குரலுக்கு தன்னை உவந்து அளிக்கக்கூடிய ஆளுமை மிகுந்தவர் - அவரது மாந்த நேயம் அறத்தின் ஓர் உச்ச நிலை என்று வியக்கிறார்.

காந்தீய ஆய்வாளரும் எழுத்தாளருமான திரு. K.R.A. நரசய்யா, உணர்வு பூர்வமாகவும், அறிவு பூர்வமாகவும் காந்தியை உள்வாங்கியவர். நுணுக்கமான தகவல்களை பகிர்ந்துள்ளார். தன்னைத்தானே தாங்கிப் பிடிக்கும் காந்தீயம் ஒரு சிரஞ்சீவித் தத்துவம் என பதிவிடுகிறார்.

திரு பட்டாபிராமன், காந்தியை உரையாடல் இல்லாமல் அணுக முடியாது. அவருக்கு எதிர் தரப்பு இருக்கும் ஆனால் எதிரி தரப்பு இருக்காது என்கிறார். பூனா ஒப்பந்தம், காந்தியின் கொள்கையான 'திரளான உற்பத்திக்கு மாற்று திரள் கூடி உற்பத்தி' , சோசலிஸ்ட் என்பவர் யார், காந்தி-சுபாஷ் உறவு என்பது பற்றியெல்லம் விரிவாக கூறுகிறார். காந்தியின் loyalty பற்றி அனைவரும்

அறிவோம். அவர் சொல்லும் duty of disloyalty பற்றியும், காந்தி என்ற கோட்பாடு தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் எப்படி உதவ முடியும் என்றும் விரிவாக உரையாடி இருக்கிறார்.

எழுத்தாளர் திரு பாவண்ணன், குமரப்பாவின் காந்தி மீதான ஈடுபாடு, அவரின் செயல்பாடுகள், போரட்டத்தில் காந்தியுடன் பயணித்த பெண்கள் பற்றிய அரிய தகவல்களைத் தருகிறார்.

பேராசிரியரும் களச்செயல்பாட்டருமான திரு அ.மார்க்ஸ், காந்தியை எந்த மரபுக்குள்ளும் அடங்காதவர்; புதிய மரபை இந்தியர்களின் சூழ்லுக்காகவும் ஒற்றுமைக்காகவும் உருவாக்கியவர். அதனால் தான் post modern thinker என்கிறார்கள். அடிப்படையில் தேவைகளை குறைத்துக் கொள்ள வேண்டும் என்று சொன்ன காந்தி வழிதான் இறுதியானது என்கிறார்.

எழுத்தாளர் திரு. எஸ். ராமகிருஷ்ணன் கதைகளில் காந்தி, காந்தி சார்ந்த/ பாதிப்புடைய கதாபாத்திரங்கள் பற்றியும் ஒரு ஆண்டில் ஒரு லட்சம் மாணவர்களைச் சந்தித்து காந்தியின் குரலை ஒலிக்க செய்திருப்பது பற்றியும் கூறுகிறார். நம்முடைய அறத்தை காந்தியைக் கொண்டு மீட்டெடுக்க வேண்டிய தேவை இருக்கிறது என்கிறார்.

எழுத்தாளர் திரு. வாசுதேவன் காந்தியை பின்பற்றுவதில் நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. அவரைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். ஆழமான உழைப்பு தேவை. அவருடைய அன்பு தூய்மையான ஒன்று. அவர் மனித நேயத்தின் மேல் கண்ட கனவு போல இளைஞர்கள் வருவார்கள் என்ற நம்பிக்கையை சொல்கிறார்.

மரு. வெ. ஜீவானந்தம் மருத்துவராக , காந்தி உடல் ரீதியாக உபாதைப் பட்டதை அழகாக விளக்குகிறார். காந்தி ஒரு பிறவி நோயாளி. தன் நோய்களுக்கான குறைகளை கண்டறிந்து நிவர்த்தி செய்து கொள்வது என்பதில் மருத்துவர்களுக்கு முன்னோடியாக இருந்தார். அவருடைய உயர் ரத்த அழுத்தம் பற்றிய பதிவு திருமதி சித்ரா சொல்வது போல ஆச்சர்யமான தகவலாகவும் அதனை காந்தி சமாளித்ததும் அத்துணை போராட்டங்களை முன்னெடுத்ததும் பிரமிப்பு தரக்கூடிய ஒன்று. நயீதாலிம், இயற்கையுடனான அவரின் புரிதல்கள்,

இயற்கையை மீறுவதன் அபாயங்கள் பற்றியெல்லாம் மருத்துவராக விளக்குகிறார்.

பத்திரிக்கையாளர் கடற்கரய் காந்தி பற்றி சினிமா எடுத்த திரு ஏ.கே.செட்டியார் பற்றியும் அதற்காக அவர் எடுத்த முயற்சிகளையும்,

காந்தி வ.உ. சி. பணசர்ச்சை பற்றியெல்லம் விரிவாக உரைக்கிறார்.

சூழலியலாளர் திரு. சு. தியோடர் பாஸ்கரன் தமிழ்த் திரையில் காந்திய அறிமுகம் நிகழ்ந்த விதம், வினோபாவின் அண்ணன் கனு காந்திக்கு கேமிரா பரிசளித்து காந்தியை படம் எடுக்க உற்சாகமூட்டியது, அவ்வாறு கனு காந்தி எடுத்த புகைப்படங்கள் எவ்விதம் பிற்காலத்தில் வரலாறானது, அவரைப் படம் எடுத்த இரு முக்கிய வெளிநாட்டு புகைப்படக் கலஞர்கள், தமிழ்நாட்டில் காந்தியின் ஓவியங்கள், சிற்பங்கள் போன்றவற்றை விவரிக்கிறார்.

காந்தியம் தேவைப்படாத துறையே இல்லை. எந்தவொரு பிரச்சினைக்கும் காந்தியக் கண்ணாடி மூலம் தீர்வு காண்பது சாத்தியமே என நம்பிக்கை தருகிறார்.

இந்த நேர்காணல்களுல்கான திருமதி சித்ராபாலசுப்ரமணியனின் உழைப்பு அசாத்தியமானது. ஒவ்வொரு ஆளுமையுடனும் அவர்களது பின்புலத்தை உற்று நோக்கி தகுந்த கேள்விகளை எழுப்பி அவர்களின் பதில்களை சிறந்த முறையில் வெளிக் கொணர்ந்த விதம் மிகுந்த பாராட்டுதல்களுக்குரியது. அபாரமான முயற்சி. புத்தக வடிவத்தில் ஆவணமாகி இருக்கிறது. காந்தியைப் பற்றி பன்முக அறிமுகத்தைத் தரும் இந்நூல் அனைவரும் அவசியம் வாசித்து உணர வேண்டிய ஒன்று.

25-2-2024

feb 25

ஓய்வூதிய மாற்றம்- ஊதிய மாற்றம்

பி எஸ் என் எல் ஓய்வூதியக்காரர்களுக்கு ஓய்வூதிய திருத்தம் குறித்த கோப்புகள் நகர்ந்து வருகிற செய்திகள் தரப்பட்டுக்கொண்டிருக்கின்றன. நிதி அமைச்சக செலவு இலாகாவிற்கு கோப்பு போய் அங்கிருந்து அது டி ஒ டி இலாகாவிற்கு வந்துவிட்டதுவரை தினம் ஒரு செய்தி வந்துகொண்டிருக்கிறது. கோப்பு 'ஒன்றுக்கு மேற்பட்ட முன்மொழிவுகளுடன்' சுற்றுக்கு அனுப்பப்பட்டுள்ளதாகவும் சொல்லப்பட்டு வருகிறது. இதன் நம்பகத்தன்மை பற்றி சாதகமாகவோ பாதகமாகவோ கருத்து ஏதும் கூறமுடியாது. எல்லாவற்றையும் கேட்டுக்கொள்ளலாம்.

நமக்கு அதிகாரபூர்வமாக தெரிந்த விவரங்கள் என்பது இலாகாவால் அக் 17 ல் கொடுக்கப்பட்ட விவரங்கள் மட்டும்தான். அடுத்து நம்மிடம் இருப்பது கசியவிடப்பட்ட ' note sheet'. அதில் DOT secretary வரை ஒப்புதல்பெறப்பட்டுள்ளது. DOPPw தனது post 2017 கேள்விக்கு DOTயிடமிருந்து பெறப்பட்ட notional fixation என்கிற தீர்வும் காணப்படுகிறது. இவையெல்லாம் 3 rd PRC அடிப்படையிலான முன்மொழிவுகள். பங்கேற்ற அசோசியேஷன்களுக்கு nil fitment என்பதில் ஏற்பில்லை. சில சங்கங்களுக்கு PRC என்பதில் ஏற்பில்லை.

வழக்கு மன்றம் சென்றவர்கள் PB CATல் ஊதியக்குழு அடிப்படையில் பென்ஷன் மாற்றம் என்கிற தீர்ப்பை பெற்ற பின்னணியில் அத்தீர்ப்பை DOT பரிசீலிக்க வற்புறுத்தினர். அவர்கள் 1-1-2017 முதல் என்பதிலும் 119.5 இணைப்பு என்பதிலும் PRC யிலிருந்து மாறுபடவில்லை. CPC fitment என்பதிலிருந்து derivative ஆக 32 சதம் என்பதை சேர்க்க வேண்டினார்கள்.

இதுவரை பி எஸ் என் எல் ஊழியர்களுக்கு ( கவனிக்க ஊழியர்களுக்கு) கொடுக்கப்பட்ட CPC பலன்கள் ஊதியக்குழு தேதியான 1-1-2006 லிருந்தோ , 1-1-2016 லிருந்தோ மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன. பென்சன் மாற்றம் PRCயின்படி 2011ல் ( 1-1-2007(முதல்) வந்தபோது குறைந்த பட்ச பென்சன், 80 மற்றும்

வயதானவர்களுக்கு கூடுதல் பென்ஷன் அமுலானது. இம்முறையும் குறைந்தபட்ச பென்ஷன் ரூ 9000 காத்துக்கிடக்கிறது.

நம்மிடம் எழ வேண்டிய கேள்விகள் அறிய வேண்டிய பதில்கள் இருக்கின்றன.

நீதிமன்ற (CAT) தீர்ப்பு குறித்து DOPT க்கு என்ன கொடுக்கப்பட்டு ஒப்புதல் பெறப்பட்டுள்ளது .

முன்பே DOPPWக்கு எழுதப்பட்டு விளக்கம் தரப்பட்டு பதிலை பி ஆர் சிக்கென பெற்ற பிறகு, சி பி சி என்றால் அதற்காக DOPPw க்கு எழுதப்பட்டதா - அதற்கான முன்மொழிவை DOT வைத்திருந்தால் DOPPwவிடம் ஒப்புதல் பெறப்பட்டதா. அப்படி பெறப்பட்டு இருந்தால், அது post 2016/ post 2017 க்கான அனாமலி தீர்வாக என்ன சொல்லி பெறப்பட்டுள்ளது.

இரண்டு இலாகாக்களும் DOT - DOPPw ஒன்றில் தெளிவாக இருப்பார்கள் என்றே நம்பவேண்டியுள்ளது. அது there cannot be any confusion for 'pre or post' whether the revision is as per PRC or CPC. DOT இதன் காரணமாக வேறு ஒன்றிலும் தெளிவாக இருக்கும் என்றே நம்ப வேண்டியுள்ளது. Any pension revision settlement will not lead to any confusion to the settlement of pay revision in BSNL if any in near future. Pay Revision means only from 1-1-2017.

ஊதிய மாற்ற பேச்சுவார்த்தை மீண்டும் பி எஸ் என் எல்லில் துவங்க இருப்பதை அறிகிறோம். இரண்டாவது பி ஆர் சி ஊதிய நிலைகளிலேயே தங்கி தேக்கநிலையில் இருப்பதைவிட, மூன்றாம் ஊதிய நிலைகளுக்கு ஊழியர்கள் செல்வது மேல் என்பதை உணர்வது நலம் பயக்கும். அது அவர்களின் இன்க்ரிமெண்ட் பலனையாவது உயர்த்தும்.

இதற்குரிய வகையில் மூன்றாம் ஊதிய நிலைக்கு , இரண்டாம் ஊதிய நிலையைவிட்டு செல்வது அதி அவசரமானது என்கிற புரிதல் அவசியமாகிறது. நிர்வாகம் சொல்லும் பிட்மெண்ட், ஊதிய நிலைகள் பிரச்சனையாகலாம். Pre 2017 பென்ஷனர்களுக்கான பலனைவிட அது குறைவாக இருக்க முடியாது என்பதை நிர்வாகமும் அறிவர். அதை Joint Recommendations ( that is proto settlement ) என்பதில் ஷரத்தாக்க முயற்சிக்கலாம்.

இரண்டாம் ஊதிய நிலையில் தேக்கத்தில் இருப்பதைவிட மூன்றாம் ஊதிய நிலைகளில் சென்று , அங்கும் stagnation increments விதிகளை தாண்டியும் தேக்கநிலை ஏற்படாது என்கிற உறுதிமொழியை பெறலாம். அப்படி நிர்வாகத்தால் அந்த உறுதிமொழி தரமுடியாவிட்டால், some mechanism like new promotion policy to avoid stagnation என்கிற உறுதிமொழியை Joint Recommendations ல் ஷரத்தாக்க முயற்சிக்கலாம். Clinching the issue for taking the employees to 3 rd PRC from the stagnated 2nd PRC என்பதற்கு முன்னுரிமை கொடுப்பது நல்லது.

ஊழியர் நிர்வாகத்தரப்பின் இணை பரிந்துரைகள் வந்தாலும் அவை remuneration committee, board ஒப்புதல் பெற்று DOT செல்லவேண்டும். ஏற்கனவே 74 மாதங்கள் தாமதத்தில் இருக்கிறோம். இணை பரிந்துரைகள் வந்த பின்னரும், இன்னும் கூடுதல் மாதங்கள் பல கட்ட ஒப்புதல் உருப்பெற தேவைப்படலாம்.

Joint Recommendations என்கிற கட்டத்தை தவறவிடாமல் clinch செய்யமுடியுமா என்கிற சவால் இரு முக்கிய தொழிற்சங்களிடமும் இருக்கிறது.

இவை எல்லாவற்றையும் கணக்கில் கொள்ளாமல் (pre and post) DOT pension Revision என்பதை கையாளாது என நம்பலாம்.

25-2-2024 13 hrs R. Pattabiraman

feb 25

ராஜாஜி ஒரு தேசிய சகாப்தம் - தி இந்து தமிழ் திசை தொகுப்பிலிருந்து..

தி சே சௌ ராஜன்

மந்திரி வேலைக்கு பகுத்தறிவு, நியாய உணர்ச்சி, தேசியக் கட்சிப் பற்றுகளிலிருந்து விலகி நிற்கும் மனத்துடன் சீர்தூக்கிப் பரிசீலனை செய்யும் முறை தேவை. தன் உணர்ச்சிகளை அடக்கி வைத்துக்கொள்ளும் ராஜாஜி முதல் மந்திரியாக வேலை செய்தபோது இந்த பெருந்தன்மையைப் பின்பற்றினார்..

தமக்கு ஏற்படும் துயரம், துன்பம், பகைமை, பொறாமை, அவதூறு எல்லாவற்றையும் தம்முள் அடக்கும் தன்மை அவருடைய இயல்பு..கறுப்புக்கண்ணாடியால் தமது கண்ணோட்டத்தை அவர் மறைத்துவிடுவார்..தம்மை இழிவுபடுத்தவோ அவமானப்படுத்தவோ எண்ணி, தம்மைக் கேவலமாக யாராவது பேசினாலுங் கூட அவற்றை புன்சிரிப்புடன் விழுங்கி விடுவார். இந்த சாகசத்தை உலகில் எவ்வளவு பேர் செய்ய முடியும்.

ஜே பி கிருபளானி

ராஜாஜி தனித்துவமான அறிவு ஜீவி. அவருடன் வாதிட்டு வெல்வது எளிதல்ல. தர்க்கத்தை பயன்படுத்துவது, உதாரணங்கள் காட்டுவது, வாழ்வில் நடந்தவற்றிலிருந்து விளக்கமளிப்பது என பல வழிகளை கையாள்வார்.

ராஜாஜி அந்தக்கால பண்டிதர்களைப் போல நிறையப் படித்திருக்கிறார். ஆனால் அவர்களைப் போல கட்டுப்பெட்டியல்ல அவர். யாருடைய உப்பையும் சாப்பிடாத நவீன பீஷ்மர் அவர். செஞ்சோற்றுக் கடனுக்காக யாருக்கும் கட்டுப்பட்டதில்லை. உண்மையைத் தவிர வேறு எதற்கும் அவர் அடங்கி நடந்ததில்லை. உண்மையல்லாத ஒன்றைக்கூட தான் உண்மையென்று கருதினால் அதற்குக் கட்டுப்படுவார்.

வ.ரா

தமிழர்களின் மானத்தை ஓரளவு காப்பாற்றியவர் ஆச்சாரியார். வட இந்தியாவிலே யாருக்கேனும் அறிவிலே அஜீரணம் ஏற்பட்டால் அவர்கள் உடனேயே தலைவர்களாய் மலர்ந்துவிடுவார்கள். ..தென்னாட்டுக்கு, தமிழ்நாட்டுக்கு உபதேசிக்க யாத்திரை புறப்பட்டுவிடுவார்கள். தமிழர்கள் என்ன பாலம் செய்தார்களோ இந்த நிரந்தர தண்டனையை அனுபவிக்க..வடநாட்டார் பிரசங்கம் செய்வதும், தமிழர்கள் கேட்பதும் பாகபத்திர மாமூல் ஷரத்தாக வெகுகாலமாக ஆட்சேபணையின்றி நடைபெற்று வந்தது. அந்த ஷரத்தை அடியோடு ரத்து செய்தவர் ஆச்சாரியார். வட இந்தியா போய் ஆச்சாரியார் மூலை முடுக்கெல்லாம் பிரசங்க மழை பொழிந்த பின்னர்தான் எனக்கும் என்னைப் போன்ற தமிழர்களுக்கும் மன அமைதி ஏற்பட்டது எனலாம்.

ஆச்சாரியாரை சின்ன காந்தி என்கிறார்கள். இதைப்போல அநியாயம் ஏதுமில்லை. காந்தி மகா மேதாவி- ஆச்சாரியார் மகா புத்திசாலி. காந்தியின் மூளை ரகம் வேறு; ஆச்சாரியாரின் மூளை ரகம் வேறு. மேதை வேறு புத்தி வேறு. காந்திக்கு தமது சொந்த சக்தியில் மலையை நகரச் செய்யும் நம்பிக்கை உண்டு. பிறர் சக்தியிலும் காந்திக்கு அளவற்ற நம்பிக்கை. ஆச்சாரியாருக்கு தம்மிடத்தில் சிறிது சந்தேகம்; பிறரிடத்தில் எல்லையற்ற சந்தேகம். காந்தி உலகத்தின் மனசாட்சி; ஆச்சாரியார் மனசாட்சியின் மெய்க்காப்பாளர்.

துர்காதாஸ்

சுதந்திரப் போராட்டக் காலத்தில் ராஜாஜியின் செல்வாக்கு உயர்ந்ததைப் போலவோ, வித்தியாசமான கருத்துக்களுக்காக செல்வாக்கை இழந்தது போலவோ வேறு யாருக்கும் நிகழ்ந்ததே இல்லை. பாராட்டியபோது செருக்கு அடையாமல், தூற்றியபோது மனம் தளர்ந்துவிடாமல் எல்லாவற்றையும் தன் போக்கில் எடுத்துக்கொண்டு, தன்னுடைய அறிவை மேலும் கூர்மைப் படுத்திக்கொண்டு அடுத்த கட்டத்துக்கு அவர் தயாரானது கர்ம வினையிலும் தர்மத்திலும் அவருக்கு இருந்த நம்பிக்கையைக் காட்டுகின்றன. அவைதான் இந்திய நாகரிகத்தின் , ஜனநாயகத்தின் அடிப்படையிலான வாழ்க்கையின் சாரமாகும்.

ஆர் சி மஜூம்தார்

இந்திய அரசியல் இன்று அடிவருடித்தனமும் இரட்டை நாக்குப் பேச்சும் கலந்ததாகவே நிறைந்துவிட்டது. இங்கேதான் தனித்துவராக மிளிர்கிறார் ராஜாஜி. உணர்ச்சிப் பெருக்குக்கு இடம் தராமல் அரசியலை தொலை நோக்குடன் ஆராய்வதும், அச்சமின்றிக் கருத்தை தெரிவிப்பதும் ராஜாஜியின் இரு பெரும் குணாதியசங்கள்.

feb 26

The fact is, that we do not know our distant goal. It will be determined not by our definitions but by our acts, voluntary and involuntary. If we are wise, we will take care of the present and the future will take care of itself. God has given us only a limited sphere of action and a limited vision.

Whether I should retire or not from the field..or for the matter of that from any field, is essentially and solely for me to judge..

M K Gandhi Jan 1928

feb 26

நீலகண்டன் எழுதிய South VS Northலிருந்து

டேட்டா அறிவியலாளர் எழுதிய தெற்கும் வடக்கும் புத்தகம் அதன் டேட்டா ஆய்வு என்ற நோக்கில் சமீபத்தில் பேசப்பட்ட புத்தகம். முன்னர் அதிலிருந்து சில அம்சங்களை முகநூலில் தந்திருந்தேன். இதை அடுத்த பகுதியாக தந்துள்ளேன்.

இந்தியாவில் மக்கள் தொகை பெருக்கம் மாநில அளவில் சீராக இல்லை. மாறுபட்ட அளவில் நடந்து வருகிறது. இதனால் வறுமை பிரச்சனை மட்டுமல்ல அரசியல் அதிகாரம் என்கிற பிரச்சனையின் தன்மையும் அழுத்தமும் கூட மாறுபடுகிறது. தென் மாநிலங்களில் அம்மக்கள் கட்டுப்பாட்டுடன் மேற்கொண்ட குடும்பக்கட்டுப்பாடு என்பது வேறு பகுதி மாநிலங்களில் காணப்படாததால், வருகிற 2026 தொகுதிகள் வரையறை என்பதும் பிரச்சனையாகலாம் என்கிற குரல் வலுவாக எழுந்து வருகிறது.

1971-2011 வரை மக்கள் தொகை பெருக்கம் எந்த சதவீத அளவில் நடந்துள்ளது என்பதை சென்சஸ் ரிஜிஸ்ட்ரார் தந்துள்ளார்.

ராஜஸ்தானில் பெருக்கம் 166 சதம், ஹரியானா 157, பீகார் 146, எம்பி 142, உபி 138, ஜார்கண்ட் 132, குஜராத் 126, உத்தராகண்ட் 125, மகராஷ்ட்ரா 123, சட்டிஷ்கர் 119, அஸ்ஸாம் 113, கர்நாடகா 109, மேவ 106, பஞ்சாப் 104, ஹிமாச்சல் 98, ஒரிஸ்ஸா 91, கோவா 83, தமிழ்நாடு 75, கேரளா 56

ராஜஸ்தான் 166 சதம் உயர்ந்தது என்றால் அதன் பொருளை நீலகண்டன் ”சவுத் வெர்சஸ் நார்த்” ஆசிரியர் சொல்கிறார். அங்கு 2.57 கோடி மக்கள் 2011ல் 6.86 கோடியாக உயர்ந்துள்ளனர். இரு மடங்கிற்கு மேலாக..

உபி எடுத்துக்கொண்டால் 80 எம்பிக்கள். 2011ல் மக்கள் தொகை 20.3 கோடி. சராசரி எம்பி தொகுதிக்கு 25 லட்சம் மக்கள் எனலாம். தமிழ்நாட்டில் 2011ல் 7.2 கோடி மக்கள்- 39 தொகுதிகள். சராசரி பார்த்தால் 18லட்சம். இதை வைத்து தமிழ் மக்களின் பிரதிநிதித்துவ பங்கேற்பு உபி விட 30 சதம் அதிகம் எனச் சொல்லிவிடுகிறார்கள். அடுத்த கணக்கில் 2011-2026ல் உபி கூடுதலாக 6.2 கோடி வாக்களரை பெறலாம். இதனால் அங்கு 80 தொகுதிகளில் சராசரியாக

பிரதிநிதித்துவம் 33.6 லட்சம் மக்களுக்கு ஒரு எம்பி என்றாகும். தமிழ்நாட்டில் 2011-26ல் 1.5 கோடி வாக்காளர் கூடலாம். இதனால் பிரதிநிதித்துவம் 22 லட்சத்துக்கு ஒரு எம்பி என்றாகும்.

யூனியன் அரசாங்கம் மொத்த வரிகளில் 2/3 மடங்கை பெறுகிறது. செலவில் 1/3 மடங்கை செய்கிறது என்கிறார் நீலகண்டன். Union Transfers as % of Gross tax Rev 2010-11 62.1% in UPA , in 2020-21 59.7 % in BJP rule.and this was the highest in BJP rule as per 15th FC figures. During UPA in 2013-14 it was 53.7 %.

cess plus surcharges collection for Union in 2011-12 was 10.4 of gross tax rev- this became 2019-20 into 20.2 %.- மாநிலங்கள் இதைத்தான் மத்திய் அரசின் தனிக்கொள்ளை என்கின்றனர்.

நீலகண்டன் மாநிலங்களிலிருந்து பெறுவது தருவது குறித்த 15வது நிதிக்குழு அட்டவணைகளை தந்துள்ளார். கேரளாவிற்கு தரப்படும் விகிதம் 12வது நிதிக்குழுவில் 2.67 சதம் எனில் 15 வது குழுவில் 1.93 ஆனது. கேரளா அலகேஷனில் 27.7 சத வீழ்ச்சி என்பதால் அவ்வரசாங்கம் போராடி வருகிறது. தமிழகத்திற்கு இந்த நட்டம் 23.1 சதம் என்பதால் இங்கும் போர்க்குரல் எழுகிறது. அடுத்த நிலைகளில் பாதிக்கப்பட்டவை கர்நாடகாவும் ஆந்திரமும். சாதகம் அடைந்த மாநிலங்களாக பஞ்சாப், மபி, மேவ ராஜஸ்தான் சொல்லலாம். உபி, குஜராத், பீகார் எல்லாம் கூட சற்று குறைந்த அளவில் வீழ்ச்சியைக் கண்டன.

Imperfect UNion என்பதை நேர் செய்வதெப்படி என நீலகண்டன் விவாதிக்கிறார். From the majoritarian chaos to maximal decentralisation என தன் ஆலோசனையை முன்வைக்கிறார். First Past the PostGood for Horses , bad for democracy என்கிறார். 2014 தேர்தலில் 31 சத வாக்குகளில் 282 இடங்களை பாஜக பெற்றால், 19 சத வாக்குகளைப் பெற்ற காங்கிரசால் 8 சத இடங்களைத்தான் பிடிக்க முடிந்தது.

நாம் தேர்ந்தெடுக்கும் உறுப்பினர் நாம் விழையும் பாலிசிக்கு வாக்களிப்பார் என்பதிலும் ஏமாற்றம் நிலவுகிறது. மக்கள் வேட்பாளரை தேர்தெடுக்க வாய்ப்பு கிடைக்கிறது. வேட்பாளரை கட்சி தேர்ந்தெடுப்பதால், அவர் கட்சியின் முடிவை நாடாளுமன்றத்தில் அமுல்படுத்த வேண்டியுள்ளது. அவர்களுக்கு கட்சி வழியாகத்தான் career incentives கிடைக்கிறது. கட்சியில் ஒருவரின் வளர்ச்சிக்கான CR- Monitoring கட்சித் தலைமையால் நடத்தப்படுகிறது. Political parties control the career ladder என நீலகண்டன் இங்கு சொல்கிறார்.

அரசாங்கத்தின் , ஆட்சியின் , கட்சியின் stability என்பதோ inversely related to which power is centralised. அதிக அதிகாரத்துவ மத்தியம் என்பதுடன் நிலைத்தன்மை கட்டிப்போடப்படுகிறது. அங்கு multiple points of veto power என்பது ஏற்கப்படுவதில்லை.

This system risks tyranny by investing extraordinary powers in the hands of individual leaders and party bosses, in effect making most of the elected MP powerless..Representative models allow a gradual accrual of power in the hands of Executive என்று நீலகண்டன் தன் பார்வையை முன்வைக்கிறார்.

இந்த ஜனநாயக முறையின் வேறு ஒரு விளைவையும் நாம் கண்டு வருகிறோம். personality cult வளர்த்தெடுக்கப்படுகிறது. இது great man politics- king philosopher வகைப்பட்டதாக மாற்றப்படுகிறது. மாநிலங்களிலும் political Entrpeneurs- business enterprises போல கட்சிகள் உருவாகிவிடுகின்றன.

நீலகண்டன் தன் தீர்வாக Gamified Direct Democracy என்பதை முன்வைக்கிறார். பிரதிநிதிகளை அனுப்பி சட்டம் இயற்றுதல் என்றில்லாமல், சட்டங்கள் அமுலாக நேரடி வாக்குமுறை- அச்சட்டங்களுக்கான வாக்குமுறை என்கிறார். Localised My society முறை என்பதன் விரிவாக்கம் என்கிறார். இப்போதைக்கு ஆர்வம் உள்ளவர் இந்த புத்தகத்தைப் படிக்கலாம். அவர் சொல்லும் இந்திய சோதனை இன்றைக்கு கனவு நிலையில் தான் இருக்கமுடியும்.

feb 28

விமர்சனம் என்பது ஒருவகையான விவாதப்புள்ளி என்ற புரிதல் தேவைப்படுகிறது. நமது சிந்தனையும் செயலும் கேள்விக்கு உள்ளாக்கப்படும் புள்ளியது. சுயவிமர்சன பழக்கம் இன்னும் சற்று விரிந்த தன்மையிலானது. அது தன்னை தொடர்ந்து கேள்விக்கு உட்படுத்தி transformation கொணர போராடும் ஒருவகை உள்சக்தி.

ஆனால் விமர்சனம் என்பது துரோகம் என்பதாக காட்டப்படுவதைக் காண்கிறோம். ஒரு சிந்தனையை இசத்தை / செயலைவிமர்சித்தால் -அதன் ஓடுகாலியாக நாம் காட்டப்படுவோம். ஆட்சியாளரை விமர்சித்தால், நாம் அறிந்த அளவில் நியாயமாக விமர்சித்தாலும் நாட்டின் துரோகியாக்கப்படுவோம். நம் தேச விசுவாசம் சந்தேகத்திற்குட்படுத்தப்படும்.

அமைப்பின் ஆள்பவர்களை விமர்சித்தால், அங்கும் இதே நிலைதான். ஆள்பவர்களை தவறு எனக்கருதும்போது அமைப்புகள் விமர்சிக்க தங்களுக்கு உரிமையுண்டு எனக் கோருவார்கள். அதைச் செய்வதே தங்கள் புனிதக் கடமை என அமுல்படுத்துவார்கள். ஆனால் அமைப்புகளை விமர்சனம் செய்பவர்கள் துரோகிகளாக காட்டப்படுவார்கள். அங்கு அவர்கள் களைகள் பதர்கள் என பார்க்கப்படுவார்கள். அதிகாரம் பேரளவிலானாலும் ஓரளவினாலும் அதன் டி என் ஏ வில் மாற்றம் இருக்காது போலும். நம்மில் பலர் அந்த DNA கொண்டவர்கள்தான் போலும்…

அவரவரின் சுய விமர்சனப் பழக்கம் - தானே முன்நின்று கண்ணாடி காட்டி பார்த்து முடிந்தவரை சரி செய்துகொள்ளல் கொஞ்சம் இந்த அதிகார பழக்கத்திலிருந்து ..அதாவது I am not consciously leading any one என்ற எண்ணத்தை சற்று உருவாக்கலாம்.. இந்த vanguard உரிமைக்கோரலும் சற்று மட்டுப்படும்..

feb 28

அய்ரோப்பியர் தமிழகத்தில் அடிமை வியாபாரம் நடத்தியுள்ள விவரங்களை ஜெயசீல ஸ்டீபன் தருகிறார். தமிழ்மக்கள் வரலாறு என்பதை தொடர்ந்து ஆய்வுகள் மூலம் காலவகைப்பட்டு புத்தகமாக்கியுள்ளார்.

ஜெயசீல ஸ்டீபன் அவர்கள் எழுதியவற்றை என் சி பி எச் தமிழில் கொண்டுவந்துள்ளது. காலனியத் தொடக்கக் காலம் கிபி 1500-1800 என்கிற அவரது புத்தகம் கீழ்கண்ட 5 ஆய்வுத்தலைப்புகளைக் கொண்டுள்ளது.

வேளாண்மை தீண்டாமை சமூக விலக்கங்களிலிருந்து இராணுவத்தில் சேர்தல்- பறைய பள்ளர் வாழ்க்கை

கொல்லர் தச்சர் வாழ்வியல் - நகர கிராம வேறுபாடுகள்

தமிழக கடற்கரைப்பகுதி மக்கள்- அய்ரோப்பியர் வருகையின்போது மீன்பிடி சமூகங்கள்

தமிழக அடிமைகளும் அய்ரோப்பியர் அடிமை வணிக ஆசிய கடற்பயணங்கள்

அய்ரோப்பியர் அடிமை வணிக விரிவாக்கம்- ஆப்ரிக்கா ஆசியாவிற்கு அனுப்பட்ட தமிழக அடிமைகளின் வாழ்க்கைப்பாடும்

ஜெயசீல ஸ்டீபன் அவர்கள் போர்த்துகீசிய  டச்சு பிரஞ்சு ஆவணங்களை மூலமாகக்கொண்டு இந்த வரலாற்று செய்திகளை கொடுத்துள்ளார்.

வங்காள விரிகுடா- இந்துமாக்கடல் பகுதிகளில் டச்சுக்காரர்கள் அடிமை வியாபாரம் செய்துள்ளனராம். 1201 ஆண்டு பஞ்சம் சில குடும்பங்களை அடிமைகளாக்கியதாம். பிராமணர் ஒருவரும், நிலபுலன் கொண்ட விவசாயியும் அடிமைகளை வாங்கி வீட்டு வேலை பிற வேலைகளுக்கு பயன்படுத்தியுள்ளனர். கோயில் பூசாரி ஒருவரும் ஆண்களை 30 காசுகளுக்கும், 15 நபர்களை 2 காசுக்கும் விற்ற செய்தி கிடைக்கிறதாம்.

பெட் ரோ சிரினியா ஏசு சபை உறுப்பினர் நாகப்பட்டினத்திலிருந்து வாங்கப்பட்ட அடிமைகள் திறமையானவர்கள் என்றும், பெண் அடிமைகள் சமையல், தையலில்

தேர்ந்தவர்கள் எனவும் எழுதியுள்ளார். நாகை மணி என்கிற பறைய சமூக மனிதர் பசிக்காக பிரான்சிஸ்கோ என்கிற போர்த்துகீசியனிடம் அடிமையாக இருந்திருக்கிறார்.

1625 அக் 24 கடிதம் ஒன்றில் டச்சு அதிகாரி நாகை- மெலாக்கா கப்பலில் 300 அடிமைகள் இருந்ததை பிடித்துள்ளார். பலர் மதமாற்றத்திற்கு உள்ளாகியுள்ளனர்.

பழவேற்காடிலிருந்து ஜாவாவிற்கு மியான்மருக்கு 1618-79 காலத்தில் அடிமை வியாபாரம் நடந்துள்ளது. சாதிக்காய் தோட்ட அடிமைகளாக்கப்பட்டுள்ளனர். டச்சு பொறுப்பாளர் கணக்கின்படி பழவேற்காட்டிலிருந்து 1100 பேர் அடிமைகளாக விற்கப்பட்டுள்ளனர். சிலர் போகிற வழியிலேயே கப்பலில் இறந்துள்ளனர்.

மியான்மரிலிருந்து அனுப்பிய அடிமைகள் போதாது, கூடுதலாக அனுப்பக்கோரி மாத்யுஸ் லீண்டர்ஸ் என்பவர் டச்சு அதிகாரிகளுக்கு 1638ல் கடிதம் எழுதியிருக்கிறார்.

3-3-1644ல் 4 கப்பல்கள், 5-10-1944 ல் சென்ற கப்பல்களில் மொத்தமாக 7100 தமிழர்கள் பழவேற்காட்டிலிருந்து அடிமைகளாக எடுத்துச் செல்லப்பட்டுள்ளனர். பஞ்சம் கட்டுக்குள் வந்த பின்னர் டச்சுக்காரர்கள் அடிமைகள் கிடைக்காமை குறித்து எழுதியுள்ளனர்.

1666ல் மரம் அறுக்க 4 முஸ்லிம் அடிமைகள் வேண்டும் என ஜாகர்த்தாவிலிருந்து பழவேற்காடு அடிமை வியாபார தரகருக்கு கடிதம் வந்துள்ளது.

அடிமைகள் தப்ப முயற்சித்தால் சிறை உள்ளிட்ட கடும் தண்டனைகள் கொடுத்துள்ளனர். ஏதாவது நீதி விசாரணை முறை என்பதெல்லாம் இருந்ததா எனத் தெரியவில்லை.

தேவானம்பட்டினத்தில் அடிமைகள் வாங்க டச்சுக்காரர்கள் முயன்றுள்ளனர். குழந்தை அடிமைகள் என்பதில் குறியாக இருந்தனர். செஞ்சியை ஆண்ட கிருஷ்ணப்ப நாயக்கரை மத போதகர் பிலிப் பால்டியஸ் சந்தித்து கோரிக்கை வைத்துள்ளார். நாயக்கர் தன் பகுதியில் அடிமை வியாபாரத்தை மறுத்துள்ளார்.

பரங்கிப்பேட்டையிலிருந்து சுமத்ரா, ஜாவாவிற்கு 1640-47 களில் அடிமை வியாபாரம் நடந்துள்ளது. 1640 ல் 5 கப்பல்களில் அடிமைகள் அனுப்பப்பட்டுள்ளனர்.

இதற்கான டச்சு முகவர் பரங்கிப்பேட்டையில் தங்கியிருந்துள்ளார். ஜாவாவிற்கு 100 அடிமைகளை ஏற்றிச் சென்ற கப்பல் உரிமையாளர் அகமது மரக்காயர். இவருக்கு டச்சு  சுங்கவரி விலக்கு கொடுத்துள்ளனர். சீர்காழியில் இருந்த தரகர் மீர்ஜங் மரக்காயர்.

நாகையிலிருந்து கொழும்புவிற்கும் ஜகர்த்தாவிற்கும் 1644-96 நீண்ட காலத்திற்கு அடிமைகள் அனுப்பப்பட்டுள்ளனர். நாகையில் மிக மலிவாக அடிமைகள் கிடைத்ததால் 5000 தமிழர் 11-11-1659ல் இலங்கைக்கு அனுப்பட்டுள்ளனர்.

1666ல் நாகையில் கொடும் பஞ்சம் நிலவியது. இவர்களை அடிமைகளாக வாங்கி காப்பாற்றியது புரோட்டஸ்டண்ட் தர்மம் என  டச்சு அதிகாரிகள் நியாயப்படுத்தியுள்ளனர். 1667 ல் யாழ்ப்பாணத்திற்கு நெசவுக்கும், சாயத்தொழிலுக்கும் அடிமைகள் அனுப்பப்பட்டுள்ளனர். 1694லும் நாளையோ 5000 அடிமைகள் வாங்கப்பட்டுள்ளனர்.

தூத்துக்குடியிலிருந்து இலங்கைக்கு 1673-1704ல் அடிமை வியாபாரம் நடந்துள்ளது. முதல் 4 ஆண்டுக்குள் 1839 அடிமைகள் கொழும்புவிற்கு அனுப்பப்பட்டுள்ளனர். மதுரை முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சி 1685ல் இந்த வியாபாரத்திற்கு தடை விதித்துள்ளார். அவர் மறைவிற்கு பின்னர் தடை நீங்கி வியாபாரம் தொடர்ந்துள்ளது. 1694-96 கணக்குப்படி தூத்துக்குடியிலிருந்து 3859 அடிமைகளை டச்சுக்காரர்கள் எடுத்துச் சென்றுள்ளனர்.

1687ல் சென்னையிலிருந்து சுமத்ராவிற்கு பெண் குழந்தைகள் அடிமைகளாக அனுப்பப்பட்டுள்ளனர். போர்த்துகீசியர்களும் கடற்கரை பகுதிகளில் அடிமை வியாபாரம் செய்துள்ளனர். 10 வயதிற்கு மேற்பட்டவர் என்ற கருணையை காட்டியுள்ளனர்.

இந்த வியாபாரத்தில் அவர்களே சில வரையறைகளை உருவாக்கி வீட்டுவேலை-தனியார் அடிமை, பண்ணை அடிமை, தோட்ட அடிமை, மாறிய அடிமை என வகைப்படுத்தியுள்ளனர்.

இப்படி ஒரு காலத்தை தமிழர்கள் தங்கள் வயிற்றுப்பாட்டிற்காக தங்கள் வரலாற்று காலத்தில் சந்தித்துள்ளனர்.

வாய்ப்புள்ளவர் ஸ்டீபன் புத்தகத்தை படித்துப்பார்க்கலாம்..